"The Viveka Chintamani is a Moral Force." "It is a Spiritual Gem." Regd.—No. M. 108.
"His Royal Highness desires me to express to Mr. Swaminatha Aiyar his best thanks"—Sir Francis (now Lord) Knollys.
Vol. XX.] பரிதாபி௵ FEBRUARY, 1913. மாசி௴ [No. 11.

லேசான காகிதப் பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 அணா.

சந்தா விலை விபரம்.
ஒரு வருஷத்திற்கு ரூ. 4.
ஆறுமாதத்திற்கு ,, 2-2.




# விவேக சிந்தாமணி

அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.

**DEVOTED TO THE DIFFUSION OF LIGHT AND KNOWLEDGE.**

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா ரென்னுடைய ரேனுமிலர்.-திருக்குறள்.

A POPULAR NEW REVIEW AND TAMIL MONTHLY, ESTD. MAY, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்க வதற்குத் தக.—திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS.
**ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS.**

["Hitch Your Wagon to a Star"—Emerson.]

## CONTENTS.



["Our Theism is the Purification of the Human Mind"—Emerson.]

PUBLISHED BY
THE SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY,
*Lalitâlaya, 19, Adam St, Mylapore, Madras, S.*
For the *LALITA PUBLISHING Co.*, Sole Agents and Managers.
Regd. as a 'Book' and Copyrighted.

Thick Paper Edition for Patrons.] [Minimum Subscription Rs. 5'
Overland 8 Annas extra.] [Overland 8 Annas extra.
Thin Paper Edition for the people.] [Subscription Price; Yearly Rs 4.

*Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Sruti*

*"Give me not O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is; but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*
*"Seek Truth wherever you can find it." But,*
*"Make your choice and stick to it till you reach the End."*

ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**

"HITCH YOUR WAGON TO A STAR." "TO THINE OWN SELF BE TRUE."




அன்பேயவன்: அறிவேசக்தி: ஓம் தத்ஸத்] [God is Love: Knowledge is Power: *Aum*

ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**

புத்தகம். 20.] 1913ஸு பிப்ரவரிமீ, பரீதாபிஸு மாசிமீ [சஞ்சிகை. 11.

## NOTICE.

The Editor of the *Vivekachintamani* while thanking his contributors for their valuable contributions, would like to draw the attention of the public to the fact that in pursuance of the uniform policy of this journal, articles could be received only on the understanding that the entire copy right in the articles should be vested solely in the Editor. It would not have become necessary to mention this matter now but for the fact that literary pilfering is becoming more and more prevalent in the journalistic world; and the intentions of the contributors who have by their free gift of the manuscripts helped to further the objects of the Diffusion of Knowledge Agency which the Editor has been maintaining and working for the public good under great difficulties and trials for the past twenty-five years, are being sought to be frustrated by unscrupulous persons.

C. V. Swminathaiyar, Editor & Founder V. C.

Lalita Publishing Co., Sole Agents and Managers 19, Adam St, Mylapore, S.

S Subramaniem, Joint Hon. Secretary, Vivekachintamani Rev: Committee.

"To sell the mind for money is a greater sin than to sell the body."

1. அறிவைப்பரவச்செய்வதற்கான நம் விவேகசிந்தாமணிக்கு வியாச, விஷய தானம் செய்வோர் யாவரேயாயினும் உண்மையான அந்தர்த்தியானத்தோடு பூர்ணமதஸம்மதமாய் விஷயார்ப்பணஞ் செய்யல் வேண்டும். தானம் செய்தபின் தத்தாபஹாரம் செய்யக்கூடாது. தத்தாபஹாரசிந்தையினர்க்கு விவேகசிந்தாமணி சங்கப்பலகைபோலிடங்கொடாதொடுக்கும்.

2. உழைக்கும்வழி புணராது பிழைக்கவழி தேடும் சில தப்பிலிகள் நம்மை மோசஞ்செய்யாதபடி விவேகசிந்தாமணியிலுள்ள சுதந்திரமெல்லாமெமக்கே உரிமையாமென்ற சட்டப்படி ஆதிமுதற்கொண்டே ஸர்க்கார் கெஜட்டில் தாக்கல் செய்யப்பெற்றிருக்கிறது.

3. விவேகசிந்தாமணியில்வரும் விஷயங்களையாவது அவைசம்பந்தமான ஸாதன ஸம்யம விவேகவிளக்கப் பேர்களையாவது தர்மவிரோதமாயுபயோகித்துக் கர்ம விக்னம் செய்வோர் பிழைக்கவழிதெரியாப் புல்லியர் புகும் பாழ்நரகிற்புக்கார் கதியாவர்: அடாஅது செய்தவர் படாஅது படுவர்: இகபரமிரண்டிலுமிது ஸத்தியம் ஸத்தியம், பலிக்குமென்றோதினன் பழனியாண்டவன். வேலுமயிலுந்துணை. ஆண்டானடிமையாய் உழைக்க உடன்பட்டான் கைச்சாற்றிது. ஓம்.




## The Royal Commission on Public Services in India.

## உத்தியோக சம்பந்தமான ராயல் கமிஷன்.

———:(*):———

இந்தியாவில் உத்யோக சம்பந்தமான விஷயங்களைப்பற்றி விசாரிக்க பார்லிமெந்து சபையாருடைய வேண்டுகோளின் பேரில் நியமிக்கப்பட்ட ராயல் கமிஷன் சபையார் இப்பொழுது இந்தியாவில் வந்து விசாரணை செய்துவருகிறார்கள். ஜனவரிமீ 4உ முதல் 20உ வரையில் சுமார் இரண்டு வாரத்துக்குமேல் அவர்கள் சென்னையிலுள்ள கோட்டை கௌன்ஸில் ஹாலில் கூடி சாக்ஷிகளை விசாரித்தார்கள். உத்யோகஸ்தர்களும் மற்றவர்களுமான எல்லாரும் கமிஷன் முன் வந்து சாக்ஷி சொன்னார்கள். அவர்கள் விசாரிக்கப் புகுந்த விஷயங்கள் முக்கியமாய் இந்தியன் ஸிவில்ஸெர்விஸ், ப்ரொவின்ஷியல் ஸிவில் ஸெர்விஸ் என்றுள்ள இருவகை உத்யோகங்களுக்கு நியமனம் செய்யும் முறைகளைப்பற்றியும் அந்த உத்தியோகங்களுக்குஇப்பொழுது நியமிக்கப்பட்டிருக்கிறவர்கள் திருப்திகரமாய் வேலை செய்துவருகிறார்களா? இன்னும் தேர்ந்தவர்களைத் தேர்ந்தெடுப்பது எப்படி? யென்னும் இவைகளைப் பற்றியுமாம்.

இவர்கள் முதலில் இவ்விஷயங்களைப் பற்றிப் பல கேள்விகள் தயார்செய்து அதற்கெல்லாம் எழுத்து மூலமாய் பதில் கோறினார்கள். பதில் கிடைத்தபின் மறுமொழி கூறினவர்களில் முக்கியமான பலரை நேரில் கூப்பிட்டு விசாரித்தார்கள். இந்த சபைக்குத் தலைவர் லார்ட் ஐஸிங்டன் பிரபு. இதற்கு மெம்பர்கள் ஏர்ல்ஆவ் ரோனல்ட்ஷே, ஸர் தியடோர் மாரிஸன், மிஸ்டர் சௌபால், மிஸ்டர் கோகலே மிஸ்டர் ஸ்லே, மிஸ்டர் ராம்ஸே மாக்டனல்ட், கனம் மிஸ்டர் மாட்ஜ், மிஸ்டர் ஜஸ்டிஸ் அப்தர்ரஹிம், ஸர் வாலன்டைன் கிரோல், ஸர் மர்ரே ஹாமிக் ஆகிய இவர்களாம். இச்சபையின் காரியதரிசிகள் மிஸ்டர் மாண்டேகு புட்லர், மிஸ்டர் ரஸ்ஸல் ஸ்காட் என்பவர்கள். இவர்களுடன் கூடவே ஆபீஸ் சிப்பந்திகள் சிலர் போகிறார்கள். இவர்கள் மாகாணந்தோறும் சென்று விசாரணை செய்துவிட்டு எப்ரல்மீ 19உ வாக்கில் இங்கிலாந்துக்குத் திரும்பிப் போவார்கள். பிறகு அடுத்த வருஷம் நவம்பர், டிசம்பர் மாசத்தில் திரும்பி வருவார்கள். இந்த வருஷம் இந்தியன் ஸிவில் ஸெர்விஸ், ப்ரொவின்ஷியல் ஸிவில் ஸெர்விஸ் இவ்விரண்டையும் பற்றி மட்டும் விசாரிப்பார்கள். அடுத்தவருஷம் மற்றுமுள்ள கீழ்தர உத்யோக சம்பந்தமான விஷயங்களைப்பற்றி விசாரிக்கப் புகுவர்.

சென்னையில் எழுத்து மூலமாய் சாக்ஷியம் கொடுத்தவர்கள் வெகுபேர். அவர்களில் வாக்கு மூலமாய் விசாரிக்கப் பட்டவர்கள் சிலர். இவர்களில் ஸிவில் ஸெர்விஸைச் சேர்ந்தவர்களாயுள்ள ஐரோப்பியர் நாலைந்துபேர்கள். அந்த ஸெர்விஸை சேராத ஐரோப்பியர்கள் கிறிஸ்தியன் காலேஜ் தலைவர் போன்ற சிலர். உத்யோகத்திலுள்ள இந்தியர்கள் பலர். உத்யோகஸ்தரல்லாதவர்கள் சிலர். இப்படி நால்விதமான வகுப்பு சாக்ஷிகளில் ஸிவில் ஸெர்விஸைச் சேர்ந்தவர்கள் ஸிவில்ஸெர்விஸுக்கு ஐரோப்பியர்களே நியமிக்கத் தகுந்தவர்கள் என்கிற அபிப்பிராயத்தை யொட்டிச் சாக்ஷியம் கொடுத்தார்கள். இப்பொழுது ஸிவில் ஸெர்விஸுக்கு நியமிக்கப்படுகிற முறை திருப்திகரமென்று சிலரும் திருப்தியில்லையென்று சிலரும் அபிப்பிரா

யம் கொடுத்தார்கள். ஐரோப்பியர்கள் இந்தியர்களைவிட துரைத்தன அமுல் நடத்துவதில் மேலானவர்களென்று சிலர் அபிப்பிராயங்கொள்ள கமிஷன் முன் விசாரிக்கப்பட்ட இந்தியர்கள் பெரும்பாலும் ஐரோப்பியர்களுக்கு இந்தியர்கள் களைத்தவர்களல்ல வென்கிற அபிப்பிராயம் கொண்டவர்களா யிருந்தனர். சிலர் ஸிவிலியன் உத்யோகஸ்தர்கள் நியமனம் முற்றும் திருப்திகரமாயில்லை யென்றும் சொல்லினர். ஜட்ஜ் வேலையில் ஐரோப்பிய ஸிவிலியன் உத்யோகஸ்தர்களை விட இந்தியர்கள் மேலானவர்கள் என்று பெரும்பாலர் அபிப்பிராயப்பட்டார்கள். ஐரோப்பியர்களும் ஸிவில் வழக்குகளில் ஐரோப்பிய ஜட்ஜுகளுக்கு அனுபவம் போதாதென்று அபிப்பிராயப் பட்டார்கள்.

ராயல் கமிஷன் முன்வந்த விஷயங்களில் மிக முக்கியமானது ஒன்றிரண்டு. அது என்னவெனில்: இந்தியா துரைத்தனத்தை இந்தியர்களைக் கொண்டே நடத்துவது எந்தமட்டும் அனுகூலமாயிருக்கும்? அப்படியானால், ஸிவில் ஸெர்விஸ் பரீக்ஷையை இந்தியாவிலும் நடத்தலாமா? நடத்தினால், அதனாலுண்டாகும் ஸாதாகபாதகங்கத்ளென்ன? உத்யோகங்களுக்கு நியமிக்கப் படுகிறவர்கள் பெரும்பான்மையும் இந்தியர்களாயிருந்தால் ஐரோப்பியர்கள் அவசியமாய் இருக்கவேண்டியது எவ்வளவுபேர்? இதுபோன்ற கேள்விகள் விசாரணைக்கு வந்ததில், உத்யோகநாட்டமுள்ளவர்கள் தம்மினத்தார் உத்தியோகங்கள் பெறுவதற்கான சாதக சாதனங்கள் என்னவுண்டோ அவைகளையே பற்றிப் பேசினார்களென்பது பிரஸ்தாபம்.

உத்யோகம் என்றிருந்தால், உத்யோகஸ்தர்களும் வேண்டுமே! உத்யோகம் என்றால் என்ன? சாதாரணமாய் எல்லாரும் உத்யோகம் என்றால் அதினால்வரும் சம்பளம், அந்தஸ்து, கௌரவம், பேர், கீர்த்தி இவைகளை மதித்துப் பேசுகிறார்களேயன்றி அதன் பொறுப்பை விசேஷமாய்க் கவனித்துப்பார்ப்பவர்கள் அரிதாயிருக்கிறது. உத்யோகம் என்பது உத்யோகஸ்தன் பிழைப்பதற்காக ஏற்பட்டதில்லை. ஆனால் தேச சமஷ்டி ஜீவனத்தில் (Maintenance of the Public life of the Country) ஜனங்கள் பொது விஷயங்களைப்பார்த்து அவர்களை உயர்பதவிக்குக்கொண்டு வருவதற்கான இன்றியமையாத வோர்சாதனமாம். உத்யோகம் என்றால் ஜனங்களைக்கை தூக்கி விடுவதற்கான வோர்சாதனமாம். அந்த சாதனத்துக்கு சாதகமாயிருப்பவர்கள் யாரோ அவர்களே உத்யோகஸ்தர்களாவர். சாதன சாதக அமைப்புப் பொருந்தாதவர்களை உத்யோகஸ்தானங்களுக்கு நியமிப்பதால் அநர்த்தம் நேரிடுவது நிச்சயம். ஆகையால் "குடி உயரக் கோனுயரும்" என்கிற நித்தியமான ராஜ்பதர்மத்தை யுணர்ந்து அதற்கு அனுகுணமாக வுழைக்கும் மனப்பழக்கம் வாய்ந்தவர்கள் யாரோ அவர்களையே தேர்ந்தெடுத்து நியமிக்க வேண்டும். உசிதமான உத்யோக லக்ஷிய லக்ஷணம் இப்படியிருக்க அகச்செருக்கு மிகுந்து ஸ்வயநலப்பிரியம் மேலிட்டவர்களை உத்யோகங்களுக்கு நியமித்தால் அவர் எச்சாதியராயினும் எத்திறத்தவராயினும் "வேலியே பயிரை மேய்ந்தாற்போல்" என்கிற பழமொழிக்கிலக்காய் உத்யோக லக்ஷியத்துக்குப் பங்கம் விளைவிப்பவர்களாவார்கள். லக்ஷியம் (Ideal) பங்கப்பட்டால், எல்லாம் பங்கப்படும். ஆகையால் லக்ஷியம் குன்றாதபடி பார்த்து வரவேண்டியது முதலவசியம். இதைக் கவனிக்காவிட்டால் முதற்கோணல் முற்றும் கோணல் என்று தான் முடியும். துரைத்தன விஷயம் ஸாமானியமானதல்ல. ஒரு விதத்தில் துரைத்தனம் ஸம்ஸாரத்திலும் பெரிய ஸம்ஸாரமாகும். ஒரு விதத்திலன்றிப் பார்த்தால், துரைத்தனமே ஈசுவர சேவையாகும். ஆகையால் நித்யாநித்ய வஸ்து விவேகமுள்ளவர்களே துரைத்தன காரியங்களைச் சரிவர நடத்த வல்லவர்களாவர்.

தர்மமின்றிச் செய்யும் கர்மம் வில்லங்கமாய் முடியும். தர்மமறிந்து செய்யும் கர்மம் தர்மசங்கடங்களை யுண்டுபண்ணி விவேக புத்தியுள்ளவர்களை குருவினிடம் சேர்க்கும்: அப்படியென்றால், அவர்கள் அறிவை மயக்கும் இருளைப்போக்குவதற்கும் சாதகமாகு மென்றபடி. உலகத்திலுள்ள எல்லா விஷயங்களிலும் மனதையடக்கல் மஹா கஷ்டம். அதிலும் கஷ்டம் அடங்கி யொடுங்கிய மனதைக் கிளப்பி ஆட்டுவித்தலாம். ஒழிவிலொடுங்கிய மனதை அழிவில் தர்மமறிந்து நைஷ்கர்ம ஸித்தித் துவாரா உழைக்கப் பழக்குவதே பாம்பாட்டிச்சித்தன் தொழில். மனமொடுங்கியவர்கள் ஒடுக்க நிலை தவறாதிருக்கவேண்டி வெளிவர அஞ்சுவார்கள். நாகப்பட்டணம் யோகியைப்போல் அவர்கள் கேவலத்திலழுந்தி அந்த ஸமாதி கலையாமல் தானே நிர்வாண ஸித்தி பெறுவார்கள். கேவல ஞானத்திலும் ஸத்தியஞானம் உயர்ந்தது. ஸத்தியத்திலும் சாந்தம் மேலான படியாம். சாந்தியடைந்து உபசாந்தி பெற்றால் அது 'சக்திக்கு வித்தாம்.' சக்தி கைவசமானால் நிர்வாண தீக்ஷை பெற்று நைஷ்கர்ம ஸித்தித் துவாரா கர்மங்களைச்செய்து கர்மபந்தமின்றி விளையாடலாம். இவர்களுடைய நிலையே மேலான நிலையென்பது சூடாலை சிகித்துவஜராஜனைப் பழக்கித் தேற்றின கதையிலிருந்து விளங்கும். தாயுமானவரும் "அதுவென்றால் எதுவென வொன்றடுக்கும் சங்கை" யென்றகூறி, "அதுவெனலும் அறவேவிட்டு" சுகர்முதலானோர் பெற்ற சகஜ ஞான அனுபவமேமேலென்று செப்பியுள்ளார். ஆதலால் தான் சனகமஹாராஜன் நிலை எல்லாவற்றிலும் மேலானதாகச் சொல்லப்படுகிறது. இந்த நிலைபெற தர்மராஜ்யம் ஒரு சாதனமாம். ராஜ்யதர்மம் சாதகமாம். சாதன சாதக வியல்பறிந் துழைத்தல் உத்யோகமாம். இந்த உத்யோக பர்வம் சமஷ்டி ஞானத்துக்கும் சகஜ ஞானத்துக்கும் இன்றியமையாத ஒரு சாதனமாம். ஆதலால் உண்மையில் உத்யோகம் செய்கிறவர்கள் உத்தமவழிபற்றி நடப்பவராவர்.

அவ்வழியில் நடக்கத்தகாதவரை அந்நிலையில் வைப்பது தப்புக்கிடந்தரும். ஆகையால் ஆத்மஞானம், அதாவது அறிவின் ஸ்வரூபத்தை யறிந்து அவ்விறிவுதானாதல் உத்யோகத்துக்கு இன்றியமையாத வோர் லக்ஷணமாம். ஆத்மஞான மிருந்தால் குன்றின்மேல் விளக்குப்போல் குணம் மணம்வீசிப் பிரகாசிக்கும். அஃதின்றி சுபாலத்தால் மனவிருள் நீங்காதவரை, பரீக்ஷையில் தேறி விட்டதால் மேலானவரென்று நினைத்து, அபாரமான பொறுப்புள்ள உத்யோகங்களுக்கு நியமித்து விட்டால், அவர்கள் மனஇருளே மருளாய்மாறி மனதைக் குழப்ப மண்பதைசெப்பஞ்செயும் வகையறியாது வீண் வாதை விளைப்பார்கள். இந்த உண்மையை உள்ளபடி யெடுத்துக் காட்டி பப்ளிக் ஸெர்விஸ் கமிஷன் சபையாருக்கு எழுதிய கடிதத்தை அக்கமிஷன் காரியதரிசிகள் வந்தனத்துடன் வரவேற்றுக்கொண்டிருக்கிறார்கள். † பகவான் அவர்கள் மனதிற் புகுந்து தர்மம் தலையெடுக்க உண்மையுள்ளத் துறைக்க அவர்கள் அறிவைத் தூண்டி, அவர்கள் மூலமாய் இந்தியாவுக்கு நன்மையைச் செய்வாரென்று விராட்ரூபியான அவரைநாம் இடையறாது சிந்தித்துப் பூசித்துப் பிரார்த்தித்து வருவோமாக. ஆங்கிலேயர் ராஜ்யம் ஐரோப்பிய சிப்பந்திகள் வசமாயிருந்தாலும் இந்திய சிப்பந்திகள் வசமாயிருந்தாலும் மொத்தத்தில் தர்ம ராஜ்யமாயிருக்க வேண்டுமென்பதொன்றே கஷ்டப்பட் டுழைக்கும் ஏழைஜனங்கள் இஷ்டமாம். பகவான் அவர்களுக்கு இஷ்ட பூர்த்தியை அளிப்பாராக.

ஓம் தத்ஸத்.

---

† The Joint Secretaries to the Royal Commission beg to acknowledge the receipt of his letter dated 12th January 1913 with its enclosures from M. R. Ry., C. V. Swaminatha Aiyar Avergal with thanks.

## The Ravages of the White Ants—A Lesson from Nature Study.

### பிரகிருதி வித்யா பாடம்.

### வினைப்பூச்சி யென்னும் கரையான் செய் நாசம்.

———:(*):———

கரையான் என்பது எறும்பு ஜாதியைச் சேர்ந்தது. அதற்கு "வெள்ளை யெறும்பு" என்றே இங்கிலீஷில் பேர். இந்த கரையான் பார்வைக்கு அற்ப ஜந்து. இது செய்யும் காரியமோ மஹா பிரமாதமானது. புராணங்களில் விஷ்ணு தலை போவதற்கே காரணமா யிருந்ததாகச் சொல்லப்பட்டிருக்கிறது. விஷ்ணுவுக்கு ஹயக்ரீவ மூர்த்தம் கிடைத்தது கரையான்கள் செய்த கூத்தால்தான் என்று எல்லாருக்கும் தெரியும். விஷ்ணு ஸ்திதிகர்த்தாவாதலால் யஜ்ஞங்களைக் காப்பது அவருடைய கடமையாயிருந்தது. இப்படியவர் வில்லைகையேந்தி யஜ்ஞகாவலராய் யாகசாலை வாசலில் நிற்கையில், அவர் தூங்கிவிட்டார். காவல் கூடத்தில் கடமையிலிருக்கையில் தூங்கும் விஷ்ணுவை எழுப்ப தேவர்கள் முயன்றும் முடியவில்லை. ஆகவே அவர்கள் முன் மஹாதேவரிடத்தில் காமனை ஏவினது போல், கரையானையேவி அவரை எழுப்பச் சொன்னார்கள். கரையான் அற்பஜந்துவாதலால் அதற்கு விவேக நிதானமில்லை. ஆகவே யது பூமியிலிருந்து கூட்டமாய்க் கிளம்பி விஷ்ணுவின் கையிலிருந்த நாணிட்ட விற் கயிற்றைப்பற்றி அதைத் தின்ன ஆரம்பித்தது. வில்லின் கயிறு அறுபடவும் வில்லின்மேல் தலை சாய்த்துத் தூங்கிய விஷ்ணுவின் தலை அந்த வில் வேகத்தினால் தரித்து எட்டாத்திசையில் போய்விழுந்தது. இப்படி ஒன்று நினைக்க ஒன்று முடிந்ததைக் கண்டு தேவர்கள் அசுவனி குமாரர்களை இதற்கு என்ன செய்கிறதென்று ஆலோசனை கேட்க, அவர்கள் தீர்க்காலோசனை செய்து, விஷ்ணு நீலாதேவியைச் சக்தியம்சமாக வுடையவராதலால், அவர் நித்ரை வசமாகா திருக்க, குதிரை முகமொன்றைக் கொணர்ந்து அவர் கழுத்தில் ஒட்டவைத்தார்கள். அதனால் அவருக்கு ஹயக்ரீவர் (அசுவமுகர்) என்கிற பேரும் மூர்த்தமும் உண்டாயது. இந்த ஹயக்ரீவ மூர்த்தத்தாலேயே அவர் அகஸ்திய முனிவருக்கு ரஹஸ்யநாமாவளி யென்னும் லளிதா ஸஹஸ்ரநாமத்தின் பரமார்த்தம் விளங்க ஓதுவித்தார். ஆனைக்கும் அடி சறுக்கும் என்பது போல ஸ்திதிகர்த்தாவாகிய விஷ்ணுவே தன் கடமையில் நழுவி அசுவமுகம்பெற்றாரென்றால், நரஜன்மமெடுத்த மனுஷன் காவலனாயினும் எவ்வளவு விழிப்பாயிருந்து தன் கடமையைச் செலுத்த வேண்டு மென்பது பெறப்பட்டது.

இனி இக் கரையான் சுபாவத்தைச் சற்று கவனித்துப் பார்ப்போம். இது உருவத்தில் சிறிய ஜந்துவாயினும் கருமத்தில் பெரியது. கர்மம் எப்படி செய்யச் செய்ய வளருமோ அப்படி கரையான் பிடித்தால் அது மேலு மேலும் விர்த்தியாய்க்கொண்டே வரும். ஆகையால் இதற்கு "வினைப்பூச்சி" யென்கிற பேர்வரலாயிற்று. கரையான் ஒரு வீடு முழுக்க நாசஞ் செய்யும்; பட்டணத்தையும்கூட அழித்துவிடும். ஒரு இடத்தில் புத்துக் கட்டினால் அது நெடுக வளர்ந்து கொண்டே போகும்.

"கரையான் புற்றுக்கட்ட பாம்பு குடிபுகுந்தாற்போல" என்பது பழமொழி. கரையான் உள்ளே யிருக்கிற மண்ணையெல்லாம் சிறு சிறு துளியாக வெளியே கொண்டுவந்து அதன் வாய் எச்சிலால் ஒட்டவைத்து ஒரு பெரிய கோபுரம் போல் புற்றுக்கட்டும். கரையான் புற்றுமண் அதிக சுத்தமானது என்பர். அதில் ஜீவசத்து கலந்திருக்கிறது. ஆகையால் அதை விஷ்ணுவுக்கு வாசஸ்தானமாகவும் சொல்லுவர். கரையான் ஈரத்தை யாதாரமாகக் கொண்டு உற்பத்தியாவது. பாம்பின் சுவாஸம் பட்டால் அது மாண்டுபோகிறது. சாதாரணமாக நாம்

பார்க்கும் கரையான் எறும்பு அளவேயாயினும் அதன் தாய்ப்பூச்சியின் உடல், மூன்றங்குல நீளம் முக்காலங்குல கனமிருக்கப் பார்த்திருக்கிறோம் இந்தத் தாய்ப்பூச்சி இருந்த விடம் விட்டு நகராது. இதற்கு இருந்த விடத்தில் ராஜோபசாரங்களெல்லாம் நடக்கும். இதை படுத்த ஆண் கரையான் கறுப்பாய் இறகு முளைத்ததாய் ஒரு பெரிய ஈ அவ்வளவு பருமனிக்கிறது. இந்த ஆண்கரையான் தாய்ப்பூச்சியைப் பற்றிச் சேர, அதன் உடலிலிருக்கும் கருப்பஜலம் வெளிப்படுகிறது. அது பட்ட விடமெல்லாம் கரையான் முட்டையாய்ப் பூச்சிகள் ஏராளமாக உண்டாகின்றன. இந்த தாய்ப்பூச்சியுள்ளவரையில் கரையான்வைத்த வீட்டை யென்ன செப்பனிட்டாலும் பிரயோஜனமில்லை. ஒரு இடத்தில் செப்பனிட்டால் மற்றோரிடத்தில் புற்றுக்கட்டும். ஆகையால் வீட்டில் கரையான் புற்றுக்கட்டியிருந்தால், கரையானெடுக்கும் வில் லியைக்கொண்டு அந்த தாய்ப்பூச்சி யிருக்குமிடத்தைத் தேடிப் பிடித்து அதை யெடுத்து விடல்வேண்டும். இல்லாவிட்டால் கரையான் குடிப்புகுந்த வீடு நாசந்தான் என்பதற்குச் சந்தேகமில்லை. ஈரங்காக்கு மிடங்களிலேயே கரையான் உற்பத்தியாகும். வீட்டுக்குக் கரையான் எப்படியோ, அப்படிப்போல் மனதுக்கு கிலேசம் கரையானாகும்.

"மனக்குறை பலக்குறைவு" என்பது பழமொழி. தனையனைப் பறிகொடுத்த தாய் புத்திர சோகத்தால் 'மனம் புற்றுப் போய்விட்ட'தென்று முறையிடக் கேட்டிருக்கிறோம். "பெற்ற மனம் புற்று" என்பதின் அருத்தமும் இதுவே. தாய்மனத்தில் கருணைஜலம் பட்ட ஈரம் எப்போதும் உண்டு. இந்த ஈரம் காரணமாக மனக்கிலேசம் அல்லது மனக்குறை யுண்டானால், அது கரையான் பற்றின வீடுபோல் மனதைச் சிதையச் செய்யும். கரையான் உள்ளே யிருக்கிற மண்ணையெல்லாம் வெளியே கொணர்ந்து புற்றுக்கட்டி உள்ளம் கூடாகச்செய்யும்.

அப்படியே கிலேசம் பிடித்த மனம் உள்ளறிவு குன்றி பிரம்மை மேலிட்டுப்போம். ஆகையால் மனக்குறை யொன்றுண்டானால் அதை நித்யாநித்ய வஸ்துவிவேகமென்கிற ஞானசூரியனின் ஒளிக் கிரணங்களால் போக்கி, அது "தாய்ப்பூச்சி" யாகிற வினைக்குக் காரணமாகாதபடி பாதுகாத்து வரல்வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் மனம் உடைந்து, மனோபலமற்ற காரணத்தினால் பெருவியாதி முதலிய கர்மவிபாதிகள் தேஹத்தைப் பற்றும். மதுமேகம் முதலிய கர்ம வியாதிகளும் மனோபலக்குறைவினாலுற்பத்தியாகி, கரையான் பற்றின வீடுபோல், தேஹத்தின் உறுப்புக்களைப் பற்றிக்கொண்டு அவைகளை நாசம்செய்யும். ஆகையால் புத்திமான்கள் காமக் குரோத லோப மோக மத மாச்சரிய மென்கிற உட்பகைகளுக்கு இடம் கொடுக்கக் கூடாது. மனதுக்குக் குறைப் பட்டுக்கொண் டிருப்பதே சுபாவமானாலும், அதன் குறையறிந்து விவேக ஞானத்தால், வில்லி வினைப்பூச்சி யெடுப்பதுபோல், அதைத் தேடிப்பிடித்து வேரறபட வினைநீக்கி, திருப்தியினால் மனம் பூரணமாகச் செய்து கொள்ளல் வேண்டும்.

மனதுக்கு பலம் கொடுப்பது விவேகஞானம். மனதின் பலத்தைக் கெடுப்பது அவிவேகம். ஆகையால் தேகாரோக்யத்தைத் தேடுகிறவர்களும் தேஹம் மனம்காரணமாக வுண்டானதாகையால், மனதைப் பண்படுத்திச் செப்பனிட்டு வைத்துக்கொள்ளல் வேண்டும். இல்லாவிட்டால் தீராக்குறை யென்கிற கரையான் பிடித்து மனோவிசாரம் மேலிடுவதால் மனோபலம் கெட்டுத் தேஹபலமும், தேஹாரோக்கியமும் கெடும்.

காமநுகர்ச்சியிலும் மனோலயமே முக்கியமாகக்கொண்டு தர்மவழிப்பட்டு நடப்பர் மேலோர். தலைதெரியாக் காமம் அறிவையழிக்கும். அறிவழிந்தால் விவேகம் கெடும். விவேகம் கெட்

டால் மனக் குழப்பமும் மனோ விசாரமும் அதிகமாகும். விவேக புத்தியினால் விசாரம் செய்ய வேண்டுமேயன்றி, மனதினால் விசாரம் செய்யக்கூடாது. மனதில் விசாரத்துக்கிடம் கொடுத்தால் அது கரையான் பிடித்த வீட்டிக்குச் சமானம்தான். "கரையான் குடிவிட்டோட்டும்." மனக்கவலையும் பலக்குறைவுக்குக் காரணமாக தேஹத்தை ஜன்மஸாபல்யம் பெறவிடாது ரோகத்துக்கு இருப்பிடமாக்கி அழிக்கும். ஆகையால் கரையானும் கிலேசமும் வினைப்பூச்சிகளாம். ஒன்று ஸ்தூலம், மற்றொன்று சூக்ஷ்மம். பதஞ்சலி பகவானும் இதையே குறிப்பிட்டுச்சொல்லியிருக்கிறார்.

---

## Sri Sankara—A Sketch.

*(Concluded.)*

## ஸ்ரீ சங்கரர்.

:(o):

### எட்டாம் அத்தியாயம்.

அப்பால் சங்கரர் தமது சிஷ்யர்களாகிய பத்மபாதர், அஸ்தாமலகர், ஆநந்தகிரி, சித்விலாஸர், சமித்பாணி, சத்தகீர்த்தி, பானு, தரிசன புத்தி, விரிஞ்சிபாதர், விஷ்ணுமூர்த்தி முதலியவர்களுடன் திக்கு விஜயம் செய்யப் புறப்பட, சுதன்மராஜன் தன் பரிவாரங்களுடன் காவல் செய்து வந்தான்.

2. முதலில் திருவிடைமருதூர் வந்து சிவதரிசனஞ் செய்து, 'சத்யமத்வைதம்' என்ற வாக்கியத்தை மஹாலிங்கத்திலிருந்து உண்டாகும்படிசெய்து, யாவருக்கும் நம்பிக்கை வருவித்து, பஞ்சாயதன மதஸ்தரையும் அத்வைத சித்தாந்த முடையவர்களாக்கி சமய வாதிகளை வென்று, இராமேஸ்வர யாத்திரையை முடித்துக்கொண்டு சிதம்பரம் வந்து சிற்சபையில் ஏழுநாள் யோகநிஷ்டையிலிருந்து சிவகங்கையையுண்டாக்கி, காஞ்சிபுரம்வந்து வீரவைஷ்ணவர்களைக் கண்டித்து ஏகாம்பர நாதரையும், வரதராஜரையும் தரிசித்து, ஸ்ரீ காமாக்ஷியம்மன் சந்நிதியில் காமகோடிஸ்ரீயந்தரத்தை ஸ்தாபித்து நகரத்திலுள்ள தேவாலயங்களை ஜீரணோத்தாரணம் செய்து சேஷாசலம் என்கிற திருப்பதி வந்து, விஷ்ணு, சேஷன், சுப்பிரமண்ணியர் கூறுபாடுகளோடு விளங்கிய வெங்கடேஸ்வரரை வணங்கி அங்கு கனக யந்திரத்தை ஸ்தாபித்து, பல புண்ய க்ஷேத்திரங்களுக்குச் சென்று அநேக ஸ்தோத்திரங்களைச் செய்து சோழ பாண்டிய விதர்ப்ப நாடு வரையில் சென்று ஆந்தர வேதியர்களை மாணாக்கராக்கிக் கொண்டு, விதர்ப்பராஜன் வணங்கி உதவியாக வர, கபாலிகர் என்ற மூர்க்கர் நிறைந்திருக்கும் கன்னடம் வந்தார்.

3. இங்கு காபாலிக குருவாகிய கிரகசன் சுடுகாட்டுச் சாம்பலைப்பூசி, எலும்பு அணி பூண்டு, சடைவிரித்து, மண்டையோட்டையும் கோடாரியையும் கையிற் பிடித்து மனிதர் தலையை வெட்டிக்கொண்டுபோய் வைரவ பூஜைசெய்து, தன்னைப்போல் ஆயுத பாணிகளாயிருக்கும் பன்னீராயிரம் மாணாக்கர் சூழ யாவரையும் பயமுறுத்தி நரபலியிட்டுவந்தபடியால் வேத மார்க்க மொழிந்துபோய் வைரவாகமமே பிரசித்தமாயிருந்தது.

4. ஸ்ரீ சங்கரர் பல மாணாக்கருடன் சேனையும் அரசனும் காவலாக வரும்பொழுது, தனது மதபலம் குறைந்து வருகிறதென் றறிந்த கிரகசன் தனது சிஷருடன் ஆயுதபாணியாய் சங்கரரைக் கொல்வேனென்று எதிர்த்து வந்தான். சுதன்மராஜன் தன் படையைக் கொண்டு ஒரு புறம் அவன் சேனையை வாட்ட, அவன் மந்திர வலியால் தப்பித்துக்கொண்டு தனது மாணாக்கர்களைத் தாக்கக் கண்ட சங்கரமூர்த்தி, ஓங்கார சத்தமிட்டனர். அதனாலுண்டான அக்கினிஜ்வாலை காபாலிக கூட்டத்தைக் கொளுத்திற்று. கிரகசன் மறுபடியும் வைரவரை தியானித்துக்கொண்டு கோடாரியால் சங்கரரை வெட்ட வந்தபோது, வைரவர் தன் ஸ்வரூபமாயிருக்கும் ஆத்மயோகிக்கு அபகாரம்

நினைத்த காபாலிகன் தலையை அறுத்துக்கொண்டு போயிற்று. அன்று முதல் காபாலிக மதம் தொலைந்தது.

5. பின்பு, ஸ்ரீசங்கரர் கோகரணம் சென்று அத்வைதக் கொள்கையை போதித்து கூர்ச்சரம் துவாரகை முதலிய விடங்களுக்குப்போய் வீர வைஷ்ணவர்களை வென்று, பாலிகம், அவந்தி முதலிய விடங்களுக்குச் சென்று அங்கங்கு அனுஷ்டிக்கப்பட்டு வந்த சாங்கிய, கணாத, கௌதம, நாஸ்திய மதங்களையும், மகாராஷ்டிர தேயத்தில் பிரசித்தியான துர்கை மதத்தையும், மிதிலை, நேபாளம், கௌடம் முதலிய விடங்களில் அநுஷ்டிக்கப்பட்டு வந்த சாக்தேயம் கணபத்தியம், கௌரம், பாசுபதம், இந்திரம், சேஷம், கருடம் முதலிய பலசிற மதங்களையும் நியாயமான தருக்கங்களால் வென்று, துஷ்டர்களைத் தண்டித்து இஷ்டர்களைக் காத்து பரத கண்டத்தில் மதச்சண்டையை யொழித்து ஞானப் பிரகாசத்தை யுண்டாக்கினர்.

6. பிறகு ஸ்ரீசங்கரர் கங்கைக்கரையை யடைந்து வேதாந்த விசாரஞ் செய்துக்கொண்டிருக்கையில் மந்திரசித்தியடைந்த அபிநவகுப்தர் என்றவர், தாம் ஸ்ரீசங்கரரிடம்-வாதிலடைந்த அபஜெயத்தால் மனம் பொறுக்காமல் ஏவற் கருமம் செய்ய, அதுவந்து சங்கரரது ஆசனத்தை யடைந்து மூலரோகத்தை யுண்டாக்கிற்று. சங்கரர் அதை அலக்ஷியமாக கவனிக்காதிருந்ததை யறிந்த பத்மபாதர் அவ்வேவற் தெய்வத்தை ஏவியவன்மேற்றானே மீறித்துச் செலுத்தியதால், அது அவனைப் பற்றி அல்லோல கல்லோலப்படுத்தி விரைவிற் கொன்றுபோட்டது. அன்றுமுதல் மந்திரவாதிகள் அனைவரும் அஞ்சி அமர்ந்தனர்.

7. வேறொரு நாள் சங்கரர் மாணாக்கர்களை கங்கைக் கரையிலிருக்க விதித்து, யோக சித்தியால் குருநாட்டிற்கும் சிந்து தேசத்திற்கும் சென்று பிர்ம வித்தையை அங்குள்ளவர்களுக்கு போதித்து, சாக்தேய மதத்தினை மறுத்து, "சௌந்தரியலகரி" முதலிய நூல்களை இயற்றி, மறுபடியும் கைலாசம் சென்று ஸ்ரீசந்திரமௌளீஸ்வர லிங்கம் முதலியவற்றை எடுத்துக்கொண்டு வருகையில், கிம்புருட வனத்தில் காத்திருந்த பிர்மராக்ஷதனுக்கு பிர்மஹத்தியைப் போக்கி, அவனை கலியுக முடிவுவரை தாம் ஸ்தாபித்த பீடங்களைக் காவல் செய்யும்படி ஆக்ஞாபித்து, இரேணவகிரி, ஸ்வாலாமுகி, பகளாமுகி முதலிய ஸ்தலங்களி லுள்ளவர்களுக்கு அனுக்ரகம் செய்து கங்கைக்கரையை யடைந்தனர்.

8. மற்றொருநாள் பத்மபாதரை ஆகாய மார்க்கமாய் அழைத்துக்கொண்டுபோய் மகம் மேரு சிகரம், கிரக மண்டலம், துருவ விருத்தம் முதலியவைகளைக் காட்டி, காலகணித முறை, கிரகணம் முதலியவைகளையும் உணர்த்தியதன்றி, ஒருநாள் மாணாக்கர்களை ஓரிடத்திலுட்காரவைத்து பல இரகஸ்யங்களையும், சித்திக் காக்ஷிகளையும் பிரத்தியக்ஷமாகக் காட்டி அவரவர்கள் பாவ விமோசனமாகும்படி செய்து பஞ்சத்திராவிடம், பஞ்சகௌடம் என்னும் பத்துவித பிராமணர்களையும் அவர்களின் உட்பிரிவுகளையும், எல்லா வருணாஸ்ரம தர்மங்களையும், அத்வைத வுபாசனையின் சூக்ஷமங்களையும் போதித்து, இலிங்கம் தரித்தலாகிய வீரசைவ விரதமொழிய சைவத்தை அனுஷடிக்கலாமென்றும், சக்கிராங்க மென்னும் வீரவைஷ்ண தீக்ஷையொழிய விஷ்ணுபூஜை விரோதமானதல்ல வென்றும், மது மாமிசங்களொழிய சக்தியை உபாசிக்கலாமென்றும், எலும்பைத் தரித்துக்கொள்ளுதலொழிய கபாலிக மூர்த்தியை பூஜிப்பதையும் ஒப்புக்கொள்ளலாமெனவும், இரத்த சாவனமின்றி சூரிய ஆராதனை செய்யலாமெனவும், எச்சிற் குற்றமின்றி கணபதியை பூஜிக்க வேண்டியதென்றும், பூததயை, சத்தியம், சுத்தம், குரு, தெய்வபக்தி முதலிய நற்குணங்களை மேற்கொண்டு வேதவிதிப்படி சிர

த்தை, பக்தி, தியானம், ஞானம், யோகங்களில் சாதன மடைந்து சிவ விஷ்ணு சக்தி வைரவ சூரிய கணபதி ரூபமாய் உலகையாள்பவனும், எல்லாத் தெய்வமும் தானும், எல்லா முணர்ந்து எங்கும் நிறைந்தவனும், தன் இச்சா ரூபமான மாயையினிடத்தில் பல வுலக நாடகங் காட்டவல்ல ஒரே கடவுளாகிய பரமசிவமொழிய வேறில்லை யென்றும், அதையறிய பேதநோக்கம் தடையாதலின், ஆத்மலிங்கோபாசனை செய்து, தனக்கு இஷ்டதெய்வமாக ஒன்றை குரு உபதேசப்படி மந்திர, தியான, யோக உபாசனைசெய்து, சகுணத்தால் மூர்த்தியருளையும், குருவருளால் பெற்ற நிர்குண உபாசனையால் ஆன்மானுபவத்தையும் அடைந்து ஜீவன்முக்தர்களாய் அத்வைத சித்தியடைந்து சிவாநந்தத்தை யடைவதே உங்கள் லக்ஷியமாக விருக்கவேண்டு மென்றனர்.

9. அச்சமயத்தில் ஸ்ரீகௌடபாத சுவாமிகள், (சங்கருடைய குருவாகிய கோவிந்த பகவத் பாதருடைய ஆசிரியர்,) ஆகாயமார்க்கமாய் வந்து சங்கரர் முன்தோன்றி சங்கரரைப் பலவாறு புகழ்ந்து ஆசிர்வதித்துச் சென்றனர்.

10. பிறகு ஒருநாள் ஸ்ரீ சங்கரர் தமது உத்தம சிஷர்களுடன் காஸ்மீர தேசத்தில் ஸ்ரீநகரிலுள்ள சரஸ்வதியின் சர்வஞ்ஞ பீடத்தின்மீது ஏறும் கருத்துடன் அங்குசென்றார். அது தேவர்களால் அமைக்கப்பட்ட வித்யாபீடம். அதற்கு நான்கு திசைகளிலும் நான்கு வாயில்களும், அவ்வாயில் வரையில் ஒவ்வொரு திக்கிலும் அறுபத்துநான்கு படிகளும், அப்படிகள் ஒவ்வொன்றிலும் வித்வான்கள் வடிவமாக தேவதைகளால் சூழப்பட்டது. அப்பீடத்தின் முன் புறத்தில் கனகமயமான சரஸ்வதி விக்கிரகத்தையுடைய ஆலயத்தையும் விளங்கப்பெற்றது. சர்வ கலைகளையு முணர்ந்தவருக்கு மட்டும் இப்பீடத்தின் படிகளில் வீற்றிருக்கும் தேவதைகள் வழிவிடும். வாயில் கதவுகளும் திறக்கும். பீடமும் இடங்கொடுத்து சரஸ்வதி தேவியின் அனுக்கிரகமு முண்டாகும். இப்பீடத்திற்கு வடக்கு, கிழக்கு, மேற்கு என்னும் மூன்று திசை வாயில்கள் அத்திசைகளினின்று வந்த அறிஞர்களால் திறக்கப்பட்டு தென் திசை வாயில்மட்டும் மூடப்பட்டே யிருந்தது. அதைத் திறக்க வேண்டுமென்ற இச்சையுடன் வந்து படிகளில் வீற்றிருக்கும் வித்வான்கள் வினாவிற்கு விடை கூறமாட்டாது திரும்பியவர் பலர். ஸ்ரீ சங்கரர் அப்பீடத்தின் படிகளிலுள்ள ஒவ்வொரு வித்வான் கேட்ட கேள்விக்கும் தகுந்தபடி பொருத்தமாக விடையளித்து படிகளைக்கடந்துசென்றார். வாயில் தானே திறந்தது. பீடத்திலிருந்து அசரீரியாக கேட்கப்பட்ட வினாக்களுக்கும் சற்றுங் கூசாமல் விடைகூறி உள்ளே சென்று பீடத்தின் மேலேறி யுட்கார்ந்தார். உடனே பீடாதிகாரியாகிய சரஸ்வதிதேவியார், "பூமண்டலாசாரிய! சகல கலாவல்லப! நீர் ஸ்தாபித்த அத்வைதம் நித்யமாக விருக்கக்கடவது" என்று இனிய கம்பீரமான தொனியுடன் கூறினர். ஸ்ரீ சங்கரர் மேல் புஷ்பங்கள் சரமாரியாக விழுந்தன. மங்கள வாத்தியங்கள் முழங்கின.

11. இதன் பிறகு ஸ்ரீ சங்கரர் மாணாக்கருடன் இமயமலைச் சாரலிலுள்ள கேதாரத்தை யடைந்து அங்கு தபசு செய்துகொண்டிருந்தவர்களுக்கு தத்வஞானத்தை போதித்துக் கொண்டிருக்கையில், மாணாக்கர்கள் கடோரமான பனியால் வருந்துவதைக் கண்டு கங்கையின் ஓர் புறத்தில் ஓர் தர்ப்பையைக் கிள்ளிப்போட்டார். உடனே அவ்விடத்தில் ஜலம் கொதிக்கத் தொடங்கிற்று அந்த ஜலத்தை ஜனங்கள் ஸ்நாநபானங்களுக்கு உபயோகித்து சீதநோயினின்று நீங்கி சுகமடைந்தார்கள். அன்று முதல் அதற்கு அக்கிகுண்டமென்று பெயருண்டாயிற்று. இப்பொழுதும் யாத்திரைக்காரர்கள் அந்த ஜலத்தில் ஸ்நாநபானங்களைச்

செய்தும், அன்னம் முதலியவைகளை பக்குவஞ் செய்தும் புஜிக்கிறார்கள். சகல ரோயும் பஞ்சாய்ப்பறந்து போகின்றதென்பது பிரத்தியக்ஷம்.

12. பின்பு ஸ்ரீ சங்கரர் துவாரகையில் ஓர் மடத்தை ஏற்படுத்தி பத்மபாதரை அவிடம் வைத்து சாமவேதத்திற்கு அதிகாரியாக்கி ஸ்வரூப பிர்மசாரி என்று பெயரிட்டு ஸித்தேஸ்வர் என்னும் ஸ்வாமியையும் பத்திரகாளி என்னும் சக்தியையும் கொடுத்து, ஜீவ பிர்ம ஐக்கிய ஞானத்தை அப்பிரதேச ஜனங்களுக்கு போதித்து, கீடவாள் சம்பிரதாயப்படிக்கு நடவடிக்கைகளை நடத்தி வரும்படியாகவும் செய்தார்.

13. ஜகந்நாதத்தில் ஓர் மடத்தை ஏற்படுத்தி அஸ்தாமலகரை யவ்விடத்திலமைத்து ருக்வேதத்திற்கு அதிகாரியாக்கி பிரகாச பிர்மசாரியென்று பெயரிட்டு, ஜகந்நாதன் என்னும் ஸ்வாமியையும் விமலா என்னும் சக்தியையும் கொடுத்து, பிர்ம ஞானத்தை ஜனங்களுக்கு போதித்து போகவாள் சம்பிரதாயப்படிக்கு நடவடிக்கைகளை நடத்தி வரும்படியாகவும் செய்தனர்.

14. பத்ரிகாராயணத்தில் ஒரு மடத்தைக் கட்டுவித்து துரோடகாசாரியாரை அவிடம் வைத்து அதர்வண வேதத்திற்கு அதிகாரியாக்கி ஆநந்த பிர்மசாரியென்று பெயரிட்டு, நாராயணர் என்னும் ஸ்வாமியையும் பூர்ணகிரி யென்னும் சக்தியையும் கொடுத்து ஆத்மஞானத்தை ஜனங்களுக்கு போதித்து நந்தவாள் 'சம்பிரதாயப்படிக்கு நடவடிக்கைகளை நடத்தி வரும்படி செய்தனர்.

15. பின்பு ஸ்ரீ சங்கரர் துவாரகை, ஜகந்நாதம், பத்ரிகாராயணம் என்னும் மூன்று பீடத்திலுள்ள அதிகாரிகளும் ஜகத்குருத்வமுடைய சாரதாபீட அதிகாரிக்கு உட்பட்டவர்களாயிருக்கவேண்டுமென்று நியமித்து, தாம் அவதரித்த காரியங்கள் எல்லாம் முப்பத்திரண்டு வயதிற்குள் நிறைவேறிற்றென்று திருப்தி யடைந்து, ஆநந்த பரவசராய் நிற்க, தேவர்கள் பாவெளியிற்றோன்றிப்புகழ், தத்தாத்திரேயர் குகை வரையில் மாணக்கருடன் சென்று யாவருக்கும் செல்ல விடைகொடுத்து, தாம் குகையிற் பிரவேசித்து சிவயோக சமாதியிலிருந்து லிங்க சரீரத்தை சிதம்பரமாக்கி வானத்தெழும்பி ரிஷபவாகனருடராய் தேவர்கள் சூழ கைலாஸத்தை யடைந்தனர்.

ஓம் தத்ஸத்.

T. C. வேங்கடரமணய்யர்.

---

## Easy Lessons in Economics

### Lesson XIV.

### குடிவாழ்க்கை.

14-ம் பாடம்.

உலோபியே தேசோபகாரி.

இத்தேச கனவான்களில் பலர் தேசத்தின் முதலைப் பாழாக்குகின்றனரென்பது அடியில் வருவனவற்றால் நன்கு விளங்கும். இலக்ஷம் ரூபாயைக் கடன்வாங்கி வண்டி குதிரைகளிலும், டாம்பீகமான துணிமணிகளிலும், உணவிலும், கூத்து பாட்டுக் கச்சேரியிலும் செலவிடுவோரை யாவரும் பெருந்தன்மை யுடையவரென்றும், தாராள குணமுள்ளவரென்றும், நல்ல மனத்தினரென்றும் புகழ்வது வழக்கம். பணத்தைச் செலவிடாமல் சேர்க்கிறவனை லுப்தன், இரக்கமில்லாத லோபியென்று கூறித் தூறுவார்கள். தாசி வேசிகளுக்கு தாராளமாகக் கொடுத்துச் செலவிட்டும், அப்போதைக்கப்போது யாஜிப்பவர்களுக்கும் இப்படியே தொழிலாகக் கொண்ட பிச்சைக்காரர்களுக்கும் கொடுத்தும் வருபவனைப் புகழ்வது இயற்கை. வீண் டம்பச்செலவு செய்யாமல் பணத்தைச் சேர்ப்பவனுடைய பணமானது அவனு

டைய பெட்டியிற் போவது ஒன்றையே ஜனங்கள் கருதி அவ்விதம் கூறுகிறார்கள். செலவாளியின் பணம் குதிரைக்காரன், கூத்தாடி, தாசி முதலியோர்களுடைய கையில் போவதைப் பார்த்து விருப்பையும், உலோபியின் தனம் யாவருக்கு முதவியின்றிப் பெட்டியிற் போவதைப்பார்த்து வெறுப்பையு மடைவது சகஜமாயிருக்கிறது. செலவாளியைப் புகழ்வதும் உலோபியை இகழ்வதும் பிழையே யாகும். உத்தம குணத்தவனென்று பலராலும் புகழப்படுகிறவனே தேசத்திற்கு சத்துரு; இவன் வேலையாட்களுடைய உணவைக் குறைப்பவன். சிலரவனால் ஜீவிப்பது மெய்யே யாயினும் பலருக்கு நிலையாய் நின்று உதவக்கூடிய பொருளை, அவன் தன் சொந்த சுகத்தில் செலவிடுகின்றான். உலோபி என்னப்பட்டவனே வென்றால் உலகத்திற்குச் சிறந்த உபகாரியாகின்றான். உலோபியின் தனத்தைத் தொழிலாளிகள் வட்டிக்கு வாங்கிக் கொள்வார்களேயானால், அப்பணத்தைக் கொண்டு தொழில் செய்வோர் எக்காலத்திலும் ஜீவிக்கலாம். இது உலோபிக்கு இலாபகரமா யிருப்பதுடன், அவனிடத்தில் வட்டிக்கு வாங்கிக் கொண்ட தொழிலாளிக்கும் இலாபத்தைக் கொடுக்கின்றது. தவிர அந்தத் தொழிலமர்ந்த வேலையாட்களுக்கும் உலோபியின் தனத்தால் ஜீவனத்திற்கு நிலையான மார்க்கமேற்படுகின்றது. அன்றியும் தொழிலாளிகள் அறுவடையாக்கும் சரக்குகளின் பெருக்கத்தினால், முதலானது அழியாமல் நின்று வருஷத்திற்கு வருஷம் பெருகி, பல குடும்பத்தினை நீடித்துவாழக் காரணமாகின்றது.

ஒரு தேசத்தில் ஆயிரம் வேலையாட்களிருப்பதாகவும், அவர்களில் ஒருவரும் வேலையில்லாதிருக்க வில்லை யென்றும் வைத்துக்கொள்வோம். அவர்கள் அவ்விதம் பூர்ணமாக வேலையுடனிருக்கையில், பணத்தை மிகுத்துச் சேர்த்த உலோபி அவர்களுக்குப் பெருத்த நன்மை செய்தவனாகின்றான். உலோபி புதைத்து வைத்திருந்த இலக்ஷம் ரூபாயை ஒருவன் வெட்டியெடுத்தால், அதைக்கொண்டு அவன் தன் வீட்டைப் புதிதாகக் கட்டி, தன் மனைவிக்கு வேண்டிய ஆபரணங்களைச் செய்து கொடுத்து, வாகனாதிகளுடன் சுகித்திருக்க விரும்பலாம். வீட்டைக் கட்டவும் ஆபரணங்கள் செய்யவும், அவனுக்கு பல வேலைக்காரர்களும் சாமான்களும் வேண்டி யிருக்கின்றன. ஆனால் தேசத்திலுள்ள ஆயிரம் வேலைக்காரர்களுக்கும் வேலை பூர்ணமாயிருப்பதால், அவனுக்கு வேலையாட்கள் கிடைக்கக் காரணமில்லை. ஆனால் அவன் அவர்களுக்கு அதிக கூலியைக் கொடுக்க இஷ்டப்பட்டால், மற்ற முதலாளிகளை விட்டு வேலைக்காரர்கள் அவனிடம் வருவார்கள். அதனால் வேலைக்காரர்களுக்கு எவ்விடத்திலும் கூலி அதிகமாகும். முதலில் கொத்தன், தச்சன் போன்றவர்களே பலனை விசேஷமாக அடைவார்கள்; ஆயினும் பிறரும் அப்பலனில் சிறிது பாகத்தைப் பெறலாம்; வேலையாட்களுக்குக் கூலி யதிகமாவதினால் உணவு போதாது முன் உபாயமாய் ஜீவித்து வந்தவர் இப்பொழுது திருப்தியாக வுண்ணலாம். உணவில் குறைவில்லையாயின் நல்ல ஆடைகளைக் கொள்ளலாம். ஏற்கனவே ஜீவனம் சரிவர நடந்து வந்திருந்தால் அவர்கள் இன்பமான பதார்த்தங்களைப் பெற்று சந்தோஷமடையலாம். அதுவுமில்லாது போனால் வேலை செய்யும் காலத்தைக் குறைத்துக்கொண்டு, முன்பு ஒருநாள் முழுவதும் வேலை செய்து பெற்றுவந்த கூலியை முக்கால் நாள் வேலை செய்து பெற்றுக்கொண்டு சுகித்திருக்கலாம். மிருந்த காலத்தைக் கல்வி கேள்விகளில் செலவிடலாம்.

புதைந்திருந்த தனத்தைபெடுத்துச் செலவிடுவோன் வீடுகட்டி முடிந்ததும், வேலைக்காருடைய ஸ்திதி, அவன் புதையலை யெடுப்பதற்கு முன்னிருந்ததுவே யாகும். செலவிட்ட பொருளுக்கிடாக, சுகித்திருக்க அவனுக்கு மாளிகையாயிற்று. வேலை நடந்த வரையில் வேலைக்கா

ரர்களுக்கு சுக ஜீவனமும் ஒருக்கால் கொஞ்சம் மிகுத்துவைக்கப் பொருளுமாயிற்று. புதைத்து வைத்திருந்த தனம் வீடு கட்டுவதில் செலவிடப் பட்டதால் நிலையான சுக மொன்றும் தொழிலாளிகளுக் குண்டாகவில்லை.

ஆனால் புதையலை யெடுத்தவன் வீடு கட்டுவதில் அதைச் செலவிடாமல் பஞ்சுத் தொழிற்சாலை யொன்றை ஏற்படுத்தி, அத்தொழிலை யாரம்பிப்பதாகக் கருதுவோம். கண்டெடுத்த இலக்ஷம் ரூபாயின் ஓர் பாகத்தைக் கொண்டு தொழிற்சாலை யொன்றை அமைப்பிக்கிறான்; மற்றொரு பாகத்தைக்கொண்டுக் கருவிகளையும் பஞ்சையும் வாங்குகிறான்; மிகுந்ததை நெய்வோருடைய கூலிக்காகச் செலவிடுகிறான். முன் கூறியதுபோலவே தொழிற்சாலை கட்டுவோருடைய ஸ்திதி கொஞ்சம் மேலாகும். கருவிகளை விற்போர் வரும்படியும் வளரும். இவ்விரு வகுப்பினரே யல்லாத நெய்வோருக்கு இப்பொழுது நிரந்தரமான வேலைக்கு இடமுண்டாயிற்று. ஆகையால் முன் வீடுகட்டினவர்கள் வேலை நடந்த காலத்திற்கு மாத்திரம் அதிக கூலியை யடைந்து பின் பழய ஸ்திதிக்கு வந்தது போலில்லாமல் இப்பொழுது நெய்வோர்களுக்கு நிரந்தரமான அதிக கூலிக்கு மார்க்க முண்டாயிற்று. நெய்வோர் வரும்படி செவ்வையாயிருப்பது கண்டு பிறரும் அத்தொழிலை மேற்கலாம்.

வீடுகட்டினதில் பலன் வேலையாட்களுக்கு ஒரே வருஷத்தில் மாறியது. கைத்தொழிலில் திரவியத்தைச் செலவிட்டதினால் அவர்களுக்கு நீடித்த சுகத்திற்கு ஆதார மாச்சுது. இவ்விதமாகவே ஒருவன் வாகனாதிகளிலும், அவை போன்ற தன் இந்திரியசுகங்களிலும் செய்யும் செலவினால் தேசத்தின் முதல் குறைந்து வேலைக்காரர்களுக்கு நஷ்டம் சம்பவிக்கும். ஒருவன் தான் நடத்திவந்த தொழிற்சாலையை மூடி, கூலியாகக் கொடுத்துவந்த முதலை தன் மனைவிக்கு ஆபரணமாக்குவதில் செலவிடுவானுல், கம்மாளர்களுக்கும் ரத்தன வியாபாரிகளுக்கும் வரும்படி யேறும். ஆனால் அவ்வேலை முடிந்தபின் அவர்களுக்கும் பழய கதிதான். முதலாளியின் முதல் கூலியாய் உதவிவந்துபோய் மனைவியின் மேலுள்ள ஆபரணமாய் முடிந்தது. ஆகவே தன்னுடைய சுகத்தின் பொருட்டு செலவு செய்கிறவர்களால் வேலை செய்வோருடைய வரும்படி குன்றிப்போம். தன்னுடைய சுகத்தையே பெரிதாகக் கருதாமல் தனத்தைச் சேர்த்து கைத் தொழிலில் முதலாகவைத்து வேலைக்காரர்களுக்கு நிரந்தர கூலி கிடைக்கும்படி செய்வோரே தேசோபகாரியாவார்கள்.

T. C. வேங்கடரமணய்யர்.

———:*:———

## Do you want Employment?
## உத்தியோகம் வேண்டுமா?

———:o:———

(287-ம் பக்கத் தொடர்ச்சி)

சில வருடங்கள் பொறுத்துப் பொறுத்து மதிவல்லபன் மற்றைத் தேவிமாரிடத்தும் அவ்வாறே நடந்து அவர்களுக்கும் அப்படியே அனுகூலங்காட்டி அவ்வவரிடத்திலும் வேண்டிய சன்மானங்கள் பெற்று வந்தான். சில வருடங்களுக்குள் மதிவல்லபனுக்கு அளவிறந்த பொருள் ஒன்றுசேர்ந்தமையால் அவ்வூரிலுள்ளோர் யாவரும் தன்னை இரண்டாவது அரசனுய் எண்ணும் பெரிய சீமானுய் வாழ்ந்து வந்தான். இப்படியிருக்குங் காலத்தில் ஒரு நாள் அப்பட்டணத்திலுள்ள தனவான் ஒருவன் வீட்டில் ஒரு கலியாணம் நடந்தது. அக்கலியாணத்துக்கு அரசன் போயிருந்தான். அப்பொழுது அவ்வீட்டு மணமகளுக்கு அலங்கரித்திருக்கும் இரத்தினாபரணங்களில் மிகுதியானவை தன்னுடைய நகைகளாயிருக்கக் கண்டு அரசன் சந்தேகித்து அவ்வீட்டுக்குடையவனைத் தனியே அழைத்து இரண்டொரு நகைகளைக் காட்டி இவை என்ன

விலை யென்று கேட்க, அவன் மஹாராஜனே இவை உம்முடைய அரண்மனை வாசலில் மணியடிக்கும் மதிவல்லபனுடையவை: என் வீட்டு கலியாணத்துக்கு இரவலாக வாங்கி வந்தேன்: ஆகையால் அவற்றின் விலை எனக்குத் தெரியாது என்று கூறினன். அரசன் தன் அரண்மனைக்குச் சென்ற பிறகு மதிவல்லபனை அழைப்பித்து, நான் நேற்று இன்ன கலியாணத்துக்குப் போயிருந்தேன். அப்பெண்ணுக்குப் பூட்டியிருந்த சில இரத்தினாபரணங்கள் மிக்க விலை உயர்ந்தவையாயிருந்தபடியால் அவற்றின் விலை யென்னவென்று அந்த கனவானைக் கேட்டேன். அவன் உனக்குத் தெரியுமென்று சொன்னன். ஆகையால் அக்கனவானுக்கு நீ இரவல் தந்த நகைகளில் இரத்தின ஜடைபில்லை நீ யென்ன விலைக்கு வாங்கினய், என்று கேட்டான். மதிவல்லபன் அரசனை வணங்கி, மஹாராஜாவே, வீட்டுக்குப்போய் வரும்படி அடியேனுக்கு உத்தரவளித்தால் உடனே திரும்பி வந்து சொல்லுகிறேன் என்று அரசனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தன் வீட்டுக்கு விரைந்து சென்று, தான் அரசன் தேவிமார்களிடத்தில் பரிசாகப்பெற்ற ஆடையாபரணங்களெல்லாவற்றையும் கொண்டுவந்து அரசன் முன்பு வைத்து வணங்கி எழுந்து நின்று அவை தனக்கு கிடைத்த வரலாற்றை யெல்லாம் சிறிதும் ஒளிக்காமல் கூறி இவை யெல்லாம் உம்முடையதாகையால் தேவரீர்க்கன்றி அடியேனுக்கு இவற்றின் விலை இலேசமும் தெரியாது என்று சொன்னன்.

"ஆள்வினையு மான்ற வறிவுமென விரண்டின்
நீள்வினையால் நீளுங்குடி."

என்றபடி இவன் தன்னுடைய சோர்விலா முயற்சியாலும் புத்தி விசாலத்தாலும் தன் குடும்பத்தை விருத்திசெய்து அதி பிரபலமாயினனல்லாவாவென்று அவனுடைய புத்தி சாமர்த்தியத்துக்காக வியந்தான். அன்றியும் எவருக்கும் தீமையில்லாமல் இவன் வெருமானமாகப் பெற்ற பொருள்களை யெல்லாம் மறைக்காமல் கொண்டுவந்து காட்டி ஆதியோடந்தமாக உண்மையை உரைத்தானே யென்று மகிழ்ந்தான்.

அரசன் நல்லது இன்னுமொரு தரம் இவனை சோதித்து பார்ப்போம் என்று தனக்குள் யோசித்து மதிவல்லபனை நோக்கி நீ நம்முடைய ஆளுகைக்குட்பட்ட எல்லாத் தேசங்களிலும் சென்று அங்கங்குள்ள மனிதர், விலங்கு, புள், முதலியவற்றில் ஆண் இத்தனை பெண் இத்தனை யென்றும் மரம் மலை இத்தனை யென்றும் கணக்கெடுத்து ஒவ்வொன்றின் மொத்தம் இவ்வளவு என்று சொல்லவேண்டும். இவ் வுத்தியோகத்திலும் உனக்கு சம்பளம் கிடையாது. உன் எழுத்தாணியை மாத்திரம் ஓயாமல் அசைத்துக் கொள்ளலாம் என்று கட்டளை இட்டனன். அதுகேட்ட மதிவல்லபன் அரசனை வணங்கி, மஹாராஜனே, அடியேன் தேவரீர் கட்டளையை சிரமிசை வஹித்து செய்வதற்கு யாதும் தடையில்லை; அப்படியே செய்கிறேன். என்று அரசனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு வீட்டுக்கு வந்து விட்டான். மறுநாள் சில சிப்பந்திகளோடும் ஒரு ஊருக்குச் சென்று அங்கு ஒரு வீட்டிலுள்ள மனிதர், ஆடு, மாடு கோழி முதலியவற்றின் கணக்கெடுக்கப்போனன். அவ்வீட்டார் பயந்தோடிவந்து மதிவல்லபனை நோக்கி ஐயா, இதுவரையிலும் செய்யாத காரியத்தை இப்பொழுது அரசன் செய்வதற்கு காரணம் யாது? சற்றே தயைசெய்து சொல்லவேண்டும் என்று மதிவல்லபனை வேண்டிக் கொண்டார்கள். அவன் இது ராஜாங்க ரகசியமாதலால், ஒருவருக்கும் தெரிவிக்கக் கூடாது என்று கூறினன்.

இக்குடிகள் யாவருக்கும் எவ்வித துன்பமும் நேரிடா வண்ணம் அவர்களுடைய உயிரைத் தன்னுயிர்போல் பாதுகாத்து வரும் அரசனிடத்து இவர்களுக்கு எவ்வளவு விசுவாசமிருக்கிறதோ பார்ப்போம், வேற்றரசன் படையெடுத்து வந்தால் இவர்கள் உண்மையில் தங்களுடைய

அரசனுக்காக அமர்க்களத்திலிருந்து உயிர் விடுவார்களா? அல்லது அத்தருணத்தில் அவனை வஞ்சிப்பார்களா? இதைக் கண்டறிவோமென்று அவர்களைப் பார்த்து, நீங்கள் இவ்விஷயத்தை வேறொருவர் செவியிலும் போடக்கூடாதென்று வற்புறுத்தி அடியில் வருமாறு சொல்லத் தொடங்கினன். நம்முடைய அரசனோடு அன்னிய தேசத்தரசன் ஒருவன் நாலு மாதத்துக்குப் பின்பு யுத்தத்துக்கு வருவதாகக் கடிதம் அனுப்பி யிருக்கிறான்.

"அடற்றகையுமாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்."

சேனைக்குப் போர்செய்யும் சௌரியமும், பகைவர் மேல்வந்தெதிர்த்தால் தாங்கும் வலிமையும் இல்லாவிட்டாலும் பெரும் கூட்டமாகிய தோற்றப் பொலிவால் பெருமை யுண்டாகுமாகையால், நம்முடைய அரசன் தன் ஆளுகைக்குட்பட்ட தேசங்களிலுள்ள எல்லா ஆண் பிள்ளைகளும் அக்காலத்தில் ஒருவர் தவறாமல் யுத்தத்துக்கு வரவேண்டுமென்றும் பெண்கள் யாவரும் இராணுவத்துக்கு வேண்டிய போஜனாதிகளைப் பாகஞ்செய்ய வேண்டுமென்றும், ஆடு, கோழிகள் முதலியவை ஆகாரத்துக்கு உபயோகப்பட வேண்டுமென்றும் ஒன்று விடாமல் கணக்கெடுத்து மொத்தம் காட்டும்படி கட்டளை இட்டனன் என்று சொன்னான். அவர்கள் யாவரும் மனங்கலங்கி மதிவல்லபனை தனியே அழைத்துக்கொண்டு போய் எங்கள் வீட்டுக் கணக்கை உம்முடைய ஏட்டில் பதியாமல் விட்டுவிட்டால் உமக்கு மாதாந்தரம் இவ்வளவு தருகிறோம் என்று அவனுடன் ஏற்பாடுசெய்து கொண்டார்கள். இவ்வாறே ஒவ்வொரு கிராமத்திலுஞ் சென்று அங்குள்ள ஆண், பெண், கால்நடைகள் முதலிய சராசரங்கள் யாவற்றையும் கணக்கெடுத்துக் கொண்டு வருகையில் இராஜ விசுவாசமுள்ளவர்கள் இன்னார் என்பதையும் விசுவாச மற்றவர்கள் இன்னாரென்பதையும் ஏட்டில் குறிப்பிட்டுக் கொண்டான். இன்னும் சில குடிகள் உள்ளபடி கணக்கைக் கொடுத்து விட்டார்கள். இப்படி இருக்கையில் அரசன் ஒருநாள் மதிவல்லபனை அழைப்பித்து கணக்கெடுத்து முடிந்ததா? என்று கேட்டான். மதிவல்லபன் அரசனை நோக்கி மஹாராஜனே பறக்கும் பக்ஷிகளை யெல்லாம் ஒன்றுவிடாமல் கணக்கெடுத்துவிட்டேன். காக்கைகளில் ஆண் இரண்டு லக்ஷம் பெண் இரண்டரை லக்ஷம் முட்டையுருவாயிருப்பவை ஒரு லக்ஷம் என்று சொல்லிக்கொண்டே போனான். அரசன் நல்லது மனிதர்களுள் ஆண், பெண், எத்தனை என்று கேட்டான். மகாராஜனே! உம்முடைய தேவிமார்களில் பாண்டியன் புத்திரி ஆணோ பெண்ணோ? தெரிவித்தால் உடனே கூட்டி மொத்தம் வைத்து சொல்லுகிறேன் என்று கூறினான். பாண்டியன் புத்திரி அலியென்று தன் ஒருவனுக்குமாத்திரம் தெரியுமேயன்றி மற்றை தேவிமார்களுக்கும் தெரியாது. ஆதலால் அரசன் மிகவும் நாணமுற்று இவன் கணக்கு முழுதும் சரியாயிருக்குமென்று தனக்குள் தீர்மானித்து அவனுடைய புத்தி பலத்துக்காக அதிக சந்தோஷங் கொண்டான். அப்பொழுது மதிவல்லபன் அரசனை நோக்கி "மஹாராஜாவே! நான் தேவரீருடைய கட்டளையின்படி கணக்கெடுத்து வருகையில் ஒரு அருமையான சங்கதி தெரிய வந்தது. அது யாதெனில் தேவரீருடைய அரசாட்சிக் குட்பட்ட குடிகள் யாவரும் இராஜ விசுவாச மிருப்பவர்களாக எண்ணவேண்டாம். வேற்றரசர் படையெடுத்து வர நேரிடுமாகில் தேவரீருடைய குடிகள் இன்னபடி ஒழுகுவார்களென்பதை இப்பொழுதே அறிந்துகொண்டு அதற்கேற்றபடி நீங்கள் முன் னெச்சரிக்கையோடு இருக்கவேண்டிய தல்லவா!" என்றுகூறி இன்னின்ன கிராமத்தில் இன்னின்ன குடிகள் விசுவாச மற்றவர்களென்பதை அக்குடிகளின் வாய்மொழியைக் கொண்டே மெய்ப்பித்தான். தன் குடிகளின் பலாபலத்தை அறிந்துகொண்டிருப்பது அரசனுக்கு அத்தியாவசிய மானபடி.

யால் மதிவல்லபனுடைய தந்திரத்தை அரசன் வியந்து இவன் உண்மையானவனும் மிக்க புத்தி சாதுரியமுள்ளவனும் என்பதற்கு யாதும் ஐயமில்லை. இவனுக்கு எவ்வளவும் வரும்படியற்றதுமான தொழில்களை கொடுத்தாலும் அவற்றி லெல்லாம் இவன் விவேகத்துடன் பிரவர்த்திப்பதுமன்றி நமக்கு பெருத்த சவரணைகளைக் காட்டுகிறான். இப்படிப்பட்ட ஒருவன் நம்மிடத்தி லிருந்தால் நமக்குப் பல ஆதாய வழிகளைக்காட்டி ராஜ்ய காரியத்துக்கும் மிக்க அனுகூல முள்ளவனா யிருப்பானென்று துணிவு கொண்டு மதிவல்லபனைத் தன்னிடத்தில் மந்திரியாக வைத்துக்கொண்டான்.

ஆகையால் விவேக விளக்கம் ஒன்றைமாத்திரம் ஒருவன் தன் கைப்பொருளாகப்பற்றியிருப்பானாயின் எவ்வகையாலும் அவன் பிழைக்க வழி தேடிக்கொள்ளலாம். உத்தியோகம் நமக்கு அகப்படப் போகிறதில்லையே யென்று விவேகத்தை அபிவிருத்தி செய்வதற் கேதுவாகிய கல்வியை அநேகர் கைவிடுகிறார்கள். இது பெருந்தவறு.

மேலெடுத்துக் காட்டப்பட்ட மதிவல்லபனுடைய சரித்திரத்தைவாசித்துப் பொய்புரைத்து ஒருவன் தன் மதிவல்லபத்தைக் காட்டுவதும் முறையோ என்று கேட்கலாகாது. ஏனெனில் அவன் எழுத்தாணி சற்று அசைய இடங் கிடைக்குமானால் போதும் என்று சொன்ன வார்த்தையை அரசனுக்கு மெய்ப்பிக்கவேணும் என்னும் ரோஷத்தினாலும் குடிகளுக்குள்ளே இன்னார் இன்னார் இன்னின்ன நிலைமையி லிருக்கிறார்களென்பதை அரசனுக்குக் காட்டவேண்டிய தென்னும் நல்லெண்ணத்தாலும் அத்தகைய தந்திரங்களை அவன் அனுசரித்தானேயன்றி அரசனை வஞ்சிக்கவேண்டுமென்னும் துர் எண்ணம் அவனுக்கு எவ்வளவுங் கிடையாது. மேற்கண்ட பற்பல தந்திரங்களை அவன் அனுசரித்தானே யாயினும் ஒவ்வொரு தடவையிலும் ஒன்றையும் ஒளியாமலும் அரசனுக்கு வஞ்சனை பண்ணாமலும் நடந்து வந்ததை இதை வாசிப்பவர் கவனித்தல் வேண்டும். அதற்காகவே அரசன் அவனை வியந்து தனக்கு அமைச்சனாக்கிக் கொண்டனன்.

(முற்றும்.)

—:(*):—

## Money--the Autocrat.

## பணமென்பது 'ஆட்கொல்லி.'

பணத்தைப் புகழுவோரும் இருக்கிறார்கள். இகழுவோரும் இருக்கிறார்கள். புகழுவோர் அதிகமாயிருப்பரேயல்லாமல் இகழுவோர் லட்சத்தில் ஒருவர் இருந்தால் அரிது. அவ்விதம் இருந்தாலும் அவர் உலகத்தை வெறுத்த உத்தமராயிருப்பரே யல்லாமல் உலகத்தில் உஜ்ஜீவிக்கும் உலோபகுணஸ்தரா யிருக்கமாட்டார். ஆகவே 'பணம் பணம்' என்று நாம் ஆசைவைத்து அபிலாஷை கொள்ளும் அந்தப் பாழும் வஸ்துவானது பகுத்தறிவுள்ள மானிடர்க்கு மட்டும் பெரும் பூதாகாரமாய்த் தென்படுகிறது. மற்றப் பிராணிகளுக்குப் பணத்தின் உயர்வு தாழ்வு ஒன்றுமே தெரியாது. இப்படிப்பட்ட பணமிருந்தால் பூவுலகில் பரம சுகத்தை யடையலாமென்பது சிலபேருடைய வித்தாந்தம். அது சுத்த தப்பு. பூவுலக சுகமானது நசுரவம்; நிலையற்றது. புலசையைக் கைக்குள் அடக்கினால் எப்படியோ அப்படித்தான் பணத்தைப் பூட்டி வைப்பதும். அது எப்போதும் உருண்டுகொண்டே யிருக்கும். அவ்விதம் அது ஒருவர் கையிலிருந்து மற்றொருவர் கைக்குப் போகும்போது, அதனால் உண்டாகும் அபாயங்களும் பலவுண்டு. அதற்காக வேண்டியே நம் பெரியோர்கள் பணத்திற்கு "ஆட்கொல்லி" யென்றும் பெயரிட்டிருக்கிறார்கள். இதற்கு உதாரணமாக அடியில் வரும் ஒரு செய்தியே போதுமானது.—சோன்பூர் சந்தைக்குப் போயிருந்த நான்கு வங்காள மகம்மதிய மாட்டு வியாபாரிகள் பணத்துடன் திரும்பி வந்துகொண்டிருந்தபோது திருடர்களால் எதிர்த்துக் கொல்லப்பட்டு, காட்சன், லோட்பூர் ஆகிய இவ்விரண்டு ஸ்டேஷன்களுக்கும் மத்தியில் இருப்புப் பாதையில் கிடத்தப்பட்டிருந்தார்களாம்.

—:—

# RULE BRITANNIA, RULE.

---(*)---

## A Sequel to the Supreme Hand of Fellowship.

I

Rule Britannia, Rule! Play well thy part!
Thine the Empire stretching over land and seas
Mine the Empire ov'r thinking head and feeling heart
Which ever in unison works for good and *sees*!

II

Rule Britannia Rule! Thou, Mother of Parliaments,
Hast taught thy sons to talk and talk and rule!
I as Mother of Religions have in habiliments
Of Glory clothed My Sons, who their minds do rule!

III

Seven thousand miles across the raging seas
Hast thou stretched out thy long and mighty hand
To grasp Mine which I hold out to him alone who *sees*
And seeing worships Me as the Mother of all that stand.

IV

Seven thousand miles across, a Royal Commission
Hast thou sent to enquire and know how best to serve
The Public Cause which to Me is my Sacred Mission,
For my Gospel of Work teacheth all How best to serve!

V

The *Public real* is nothing but my *Virāt Form*
The Public Service is nothing but worship of Me in Form
Formless though *I am*, in all forms do I shine :
The Secret of Service is in the *Spirit within*, which is Mine.

VI

I am thine for ever and ever as Thou art mine!
Let thy sons come and serve me well in the Spirit of Truth
I will lift them up and let their hearts in Glory shine!
My wealth and all shall thine be, if thou art Mine in Truth.

VII

The Ideal of Renunciation is too hard for thee to grasp
The Practice of Renunciation thou canst not reach
The mind unattached and in balance held alone can grasp
Real Power and use it well to learn and teach.

VIII

Let me then the learner and teacher be in all that concern
The affections of the heart whilst thou lookst, aft'r my concern,
Since thou seekest to serve Me well ruling over my land and seas
Let My Ideals take root in all true hearts and flourish in Peace.

IX

This My Right I demand, not by claptrap cheap,
But by heritage of the Ideal Life for ages lived past,
Thy right to rule and sow the seeds which thou shalt reap
I concede: but pray let's together the eternal ideals hold fast.

Ananda Mission
MADRAS, S.
*13th January, 1913.*

INDIA REDIVIVIUS.

## THE WIFE'S LAMENT AND SATI'S PRAYER.

**"Hurled from the Housetop"**

*(4th February 1913)*

### பதியிழந்தசதியிரங்கி மாங்கல்யப்பிச்சைகோறல்.

இராகம்:—பைரவீ: தாளம்: ஆதி.

"மாங்கல்யப்பிச்சையம்மா, மறுக்காதேநீ தந்தருள்வாய்"!

[மகாஸ்ரீ கிருஷ்ண சதுர்த்தசி.]

பல்லவி.

*Refrain:*—வீட்டினுச்சிமேலிருந்து வீழ்த்தினனடிதேவி!
மாங்கல்யப்பிச்சையம்மா, மறுக்காதேநீ தந்தருள்வாய்!

அனுபல்லவி.

*Chorus of Voices:*—பட்டப்பக லடியம்மா!
பார்த்திருந்தார்க ளெல்லோரும்! (வீட்டினுச்சி)

சரணங்கள்.

(1) உச்சி வீட்டிலிருந்த நாதன்
உயிரை வாங்குவே னென்றுகூறி
மச்சுவீட்டின் பேலேதாவி
மாரகஞ்செய்தானே பாவி!—

வீட்டினுச்சி மேலிருந்து வீழ்த்தினனடிதேவி
மாங்கல்யப்பிச்சையம்மா மறுக்காதேநீ தந்தருள்வாய்!

*Chorus of Voices:*—பட்டப்பக லடியம்மா!
பார்த்திருந்தார்க ளெல்லோரும்! (வீட்டினுச்சி)

(2) மச்சுவீடு† கட்டிவாழ
மனம்பொறுக்காத மாந்தர்
குச்சுவீட்டின் கூறையேறிக்‡
கொடுமையிழைக்க லாமோ!— (வீட்டினுச்சி)

(3) பத்துமாசம் சுமந்துபெற்ற
பாலனைக்கொன்ற பாவி
மூன்றுமாச மாகுமுன்னே
மூலனைக்கொல்லத் துணிந்து— (வீட்டினுச்சி)

† பிரணவ ஆலயம் ‡ சதியோசனை செய்து மச்சுவீடு and குச்சுவீடு are after used as symbols of the Higher self and Lower self.

(4) மண்ணில்வீடு கட்டும்போதே
விண்ணில்வீடு கட்டிவாழும்
துரையேயுன்றன் திருமேனியைத்
துஷ்டர் தீண்டலாமோ!— (வீட்டினுச்சி)

(5) விண்ணிலிருந் தொளிருமோர்
விண்மீ னுதிர்ந்தாப்போல்
கண்ணிலிருந் தொளிருமென்
கண்மணியும் வீழலாச்சே!— (வீட்டினுச்சி)

(6) ஐயோவென் கண்ணேயுன்னை
இப்படியா காணவேண்டும்!
பெற்றதாய் உளம்பதறப்
பிறந்தபாலன் உயிர் துடிக்க— (வீட்டி னுச்சி)

(7) முன்னொரு நாளிலந்தக்
கண்ணகிம ணாளன்தன்னைக்
கள்வனென்று குற்றங்கூறிக்
காவலனுயிர் வாங்கினாப்போல்— (வீட்டி னுச்சி)

(8) பதியிழந்த சதியுமன்று
பத்தினிக்கடவு ளாயுள்ளாள்ளன்றி
'கள்வனோவென் கணவ'னென்றாள்!—
உள்ளம்பதைக்குதையோ! உயிருந்துடிக்குதையே! (வீட்டி னுச்சி)

(9) கோவலன் வீழ்ந்தவன்று
கூவிய மைத்ரேவட்கு
நேரேவந்து சாக்ஷிசொன்ன
மாக்ஷிபெற்ற தெய்வமே! கூ! கூ!— (வீட்டி னுச்சி)

(10) பதியேகதி யென்றுள்ளேன்
சதியேஉன்னைச் சரணடைந்தேன்!
பர்த்தாவைக் கொடுத்தருள்
வேணுமம்மா தாயேசரண்!— (வீட்டினுச்சி)

(11) மாங்கல்யப் பிச்சையம்மா
மறுக்காதேநீ தந்தருள்வாய்!
நீங்கெவர்க்கும் நினைத்தேனில்லை
தீக்கடவுள் சாக்ஷியம்மா!— (வீட்டிலுச்சி)

(12) பத்னிக்கட வுளேயுன்றன்
பாதார விந்தமன்றிப்
புகலிடந்தான் வேறறியேன்
புநிதையே தஞ்சமம்மா!— (வீட்டிலுச்சி)

(13) மங்கள வாரமம்மா
மகரத்திலே பானுவம்மா
பானுமதி கூடுமுன்னே
மாங்கல்யப் பிச்சைகேட்டேன்— (வீட்டிலுச்சி)

(14) தையமா வாஸைக்கம்மா
திருவள்ளூர் போகவேண்டும்
தீர்த்தமாட வேண்டுமென்று
இருந்தாயும் உயிர்துடிக்க— (வீட்டிலுச்சி)

(15) பஞ்சதசீ யுன்னையென்றன்
பர்த்தாபூஜை செய்தவுண்மை
உள்ளமுனக் கேற்றதானல்
உடனேயென்றன் பர்த்தாவைத்தா!— (வீட்டிலுச்சி)

(16) சங்கரபார்வதி சாக்ஷியாக
சதிமதியான் உனைத்தொழுதேன்
பஞ்சதசியென் பர்த்தாவைக்கா
ஷோடசிபாமுனைத் தினந்தொழுவேன்.—

வீட்டிலுச்சி மேலிருந்து வீழ்த்திஞனடிதேவி!
மாங்கல்யப் பிச்சையம்மா மறுக்காதேநீ தந்தருள்வாய்!

*Chorus of Voices:*—பட்டப்பக லடியம்மா!
பார்த்திருந்தார் களெல்லோரும்! (வீட்டிலுச்சி)

ஓம்தத்ஸத். ஸ்ரீயைம்.

## DIVINE WILL.

### வருஷகாலமானாலும் வருவது வந்தே தீரும்.

———:(✱):———

"இன்றைக் கிருப்பாரை நாளைக்கிருப்பரென்ற எண்ணவோ திடமில்லை" யெனத் தாயுமானசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியது பொய்யல்ல. அனுபவஸித்தமாய் அவர் உரைத்தது மெய்யென்றே சொல்லும்படியாயிருக்கிறது. நாளைக்கு என்ன சம்பவம் நேருமோவென்று நமக்குத்தெரியாது. 'எல்லாம் நானே செய்துவிட்டேன், இந்த ஆஸ்தியெல்லாம் எனக்கு, நானில்லாமற்போனால் இந்தக் காரியம் முடியாது' என்றிவ்விதமான அகங்காரங் கொள்வதெல்லாம் தப்பு. நான் என்னும் அகந்தை தீர்க்கவேண்டும். எல்லாம் எமையாளும் ஈசன் செயலேயன்றி எம்மால் ஆவதொன்றுமில்லை. ஆகவே வருவது என்றைக்கும் வந்தே தீருமென்று குறிப்பிடவேண்டி வந்தது. இதற்கு உதாரணம் வேண்டுமானால் அடியிற் குறிப்பிட்டதே போதுமானது. அமெரிக்காகண்டத்தில் டெக்ஸாஸ் என்னும் நாடுண்டு. அதில் சுமார் 20 வருஷங்களுக்கு முன் ஜேம்சு வீக்லண்டு என்னும் பெயர்கொண்ட தனவந்தனான குடியானவனொருவன் மெடில்டா டிக்னர் என்னும் வனப்பிற் சிறந்த வநிதாமணியைக் கலியாணஞ் செய்து கொள்ள விரும்பினான். இருவருக்கும் பரஸ்பரம் அன்பு மேலிட்டது. இதைக் கண்ட இவர்களது தாய் தந்தையர் விவாகத்திற்காக ஒரு நாள் முகூர்த்தம் வைத்தார்கள் ஜேம்சுவீக்லண்டின் மனதில் என்னவோ தோன்றியதில் டிக்னரை மணம் புரியாதிருந்துவிட்டான். அந்த வநிதாமணியானவள் தன் அன்பு முழுவதையும் ஜேம்சின்மீது வைத்திருந்தாளாயினும் அது தற்போது அலர்ந்து போனதைக் கண்டு மனம் வெதும்பி உயிர் துறந்தாள். இது கண்ட அம்மாதின் சகோதரன் கைத்துப்பாக்கி யொன்றுடன் சரசரவென்று ஜேம்சு வீக்லண்டின் வீட்டுக்கு வந்து அவனைப் பார்த்துச் சுட்டான். துப்பாக்கி ரவையானது சன்னத்தில் உராய்ந்து கொண்டு போய் வீட்டு முற்றத்திலிருந்த மரத்திற் பதிந்துவிட்டது. ஜேம்சு இறந்தானென்று நினைத்த மாதின் சகோதரன், தன் சகோதரிக்குப் பிறகு தான் எதற்கிருக்க வேண்டுமென்று நினைத்து தன்னைத் தானே சுட்டுக்கொண்டு மாய்ந்தான். கன்னத்தில் ரவை உராய்ந்து மூர்ச்சை தப்பிக் கீழ் விழுந்த ஜேம்சு வீக்லாண்டு பிரஜ்ஞை வந்து எழுந்துவிட்டான். வீக்லாண்டு பிறகு ஒரு மாதினை மணந்து இருபது வருஷ காலம் அவளோடு வாழ்ந்து குஞ்சு குழந்தைகளுடன் காலங் கடத்தி வருநாளில் ஒரு தினம் தன் புத்திரன் ஒருவனோடு முன் துப்பாக்கி ரவை போய்ப் பதிந்த மரத்தை வெட்டவாரம்பித்தான். மரம் வஜ்ஜிரம் பாய்ந்து கோடரிக்கும் பலமாயிருக்கவே 'டைனமைட்' என்ற வெடி மருந்து வைத்து மரத்தைத் தகர்க்க வேண்டியதாயிற்று. இந்த வெடி மருந்து ஏற்கெனவே மரத்திற் பதிந்து கிடக்கும் துப்பாக்கி ரவையுடன் போய்க் கலக்கவே இரண்டும் சேர்ந்து பிரம்மாண்டமான பேரிரைச்சலோடு வெடித்ததுடன் பழைய ரவையானது மரத்திலிருந்து கிளம்பிப் பக்கத்தில் நின்றிருந்த ஜேம்சு வீக்லண்டின் நெற்றியின் வழியே ஊடுருவிச் சென்றது. ரத்தம் குபீரென்று அடிக்கத் தரையில் வீழ்ந்தான் ஜேம்சு வீக்லண்டு; அந்த மரணத்தருவாயில் தன் புத்திரர்களைச் சமீபத்தில வைத்துக்கொண்டு இந்த துப்பாக்கி ரவை இந்த மரத்தில் வந்த விதம் இப்படியாமென்று மேலே குறிப்பிட்டபடி சொல்லிப் பிராணனை விட்டானாம். ஆதலால் எத்தனை காலமானாலும் வருவது வந்தே தீரும் என்பதற்குத் தடையென்ன?

ல, அனந்தையர்.

———:(✱):———

## Concussion of the Brain.

### மூளையின் அதிர்ச்சி.

——:++:——

மூளையென்பது சப்ததாதுக்களில் ஒன்று. எலும்பு, நரம்பு, ரத்தம், மாம்ஸம், மஜ்ஜை, மூளை, சுக்கிலம் எனத் தாதுக்கள் ஏழு. இவ்வேழும் சேர்ந்தாயது விந்து எனப்படும். விந்துவே மானிட வித்தாகும். மரத்துக்கு வித்து எப்படியோ அப்படிப்போல உடலுக்கு வித்து விந்துவாகும். இரத்த சுத்தியினல் மாம்ஸமும் மஜ்ஜையும் சுத்தப்படும். மஜ்ஜையின் சுத்தியினல் எலும்பு நரம்புகளும் மூளையும் சுத்தி பெறும். ஏனெனில் மஜ்ஜையிலேயே 'Metabolism' என்று சொல்லும் ஸ்திதி சக்தியிருந்து வேலை செய்கிறது. சிருஷ்டி, ஸம்ஹாரம் என்கிற இரு சக்திகளும் (Anabolisin and Katabolisin) ஸமரஸப்பட்டால் ஸ்திதி யுண்டாகும். ஸ்திதி சக்தி (Balance of Power) ஸ்திரமாயிருந்தால்தான் மூளை நன்ருக வேலைசெய்யும். மூளையின் வேலை அதன் சுத்தத்துக்குத் தக்கபடி பேதப்படும். மூளை அசுத்தப்பட்டால் மனக் குழப்பம் உண்டாகும். மூளை சுத்தியாக விருந்தால் மனஸுக்கு ஸூக்ஷ்ம புத்தி யதிகமாயிருக்கும். ஏனெனில் பிரக்ஞைக்கும் பூததத்துவங்களுக்கும் (அந்தக்கரணத்துக்கும் பஞ்ச பூதங்களுக்கும்) இடையில் அவையிரண்டுக்கும் சம்பந்த காரணமா யிருப்பது ஸூக்ஷ்மத்தில் மனஸும், ஸ்தூலத்தில் மூளையுமாம். ஸ்தூல ஸூக்ஷ்மங்களாகிய இவ்விரண்டுக்கும் காரணமாயிருப்பது அந்தக்கரணம் அல்லது உள்ளுணர் சக்தி.

இரத்த சுத்தியினலே மஜ்ஜையும் அதன் மூலமாக மூளையும் சுத்தி பெற்றலும் மூளை சுத்த ஸ்படிகம்போல் நிர்மலமா யிருப்பது மனேசுத்தியினல் ஆகவேண்டுமே யன்றி இரத்த சுத்தியினல் மட்டும் ஆகாது. ஆகையால்தான் ஸத்துவ போஜனத்தோடு சுத்தமான அந்தர்லக்ஷியமும் சேரவேண்டு மென்பது. அந்தர்லக்ஷிய மில்லாத ஹட யோகம் பயனற்றதாம். ஹடயோகத்தின் நோக்கமெல்லாம் தேஹத்தின் உறுப்புக்களை சுத்தப்படுத்தி அதனல் காயசுத்தியும், காயசுத்தியினல் பிராண வித்தியும் (பிராணனை தேஹத்தில் நிலைத்திருக்கச் செய்தலும்) பெறுதலாம். பிராணஸித்தி பெறுதலையே காயஸித்தியென்று சொல்கிறது. சுக்கிலத்தை வெளிவிடாது கட்டி அந்தர்லக்ஷியத்தால் மனதை சுத்தப்படுத்திக் கொண்டால் கட்டப்பட்ட சுக்கிலமானது ஓஜஸ் ரூபமாக மாறும்.

"ஓஜோஸி, பலமஸி, ப்ராஜோஸி" யென்றபடி அந்த ஓஜஸ் தானே பலத்துக்கும் பிரகாசத்துக்கும் (காந்திக்கும்) காரணமாயிருக்கிறது. காந்திசக்தி யதிகரிக்க அதிகரிக்க மூளையும் தெளிந்து ஸ்படிகம்போலாம். இந்த அவசரத்தில் அனேக சித்திகள் கைகூடிவரும். அவற்றில் வீரியத்தை விரயஞ்செய்யாது சித்தவிருத்தி நிரோத சாதனத்தினல் "அலையும் மனத்தை யடக்க"க் கற்றல், காந்திசக்தி ஆகர்ஷண சக்தி மிகுதியால் காந்தசக்தியாகிறது. இந்தக் காந்தசக்தியதிகரிக்க அதிகரிக்க, தேவர் வித்தர் கந்தர்வர்களின் கூட்டுறவும் பழக்கமும் அதிகரிக்கும். ஸ்வப்னவஸ்தையில் மனதைச் சுத்திபண்ணிக்கொண்டு அவர்களோடு ஸாதுசங்க அப்பியாஸம் வைத்துக்கொண்டு உள்ளுணர்வு பிரகாசிக்கத் தக்கதாய் மனமொடுங்கப் பெற்றல், அந்த ஒடுக்கநிலையில் எந்த இடுக்கண் நேரினும் அது சூரியனைக்கண்ட பனிபோல் நீங்கும். இது ஓர் அற்புதமான தேவ ரகஸியம். தேஜோமனஸ் சித்திக்கப் பெற்றவர்களுக்கே இதன் விசித்திரம் வெளியாகும். மற்றவர்கள் இருளும் மருளுமாய் மயக்கவேண்டியதுதான். மேலே நாம் பிராணஸித்தியென்று சொன்னதையே பிராணயாம வித்தியென்றும் சொல்லுவர். இதுநிற்க.

மூளை யதிர்ந்தால் பூமி யதிர்ந்ததற்குச் சமானமாம். மூளை யதிர்ச்சியும் பூமி யதிர்ச்சியும் அண்டபிண்ட ஸமத்துவ முறையினலே ஒரு தன்மையதாகும். பூமியதிர்ச்சியினல் நாடு நகரங்கள் ஒரு நிமிஷத்தில் பாழாய்ப்போம். மூளை யதிர்ச்சியினலேயே தேஹ உறுப்புக்களும் சிதைந்துபோம். பிராணுயம வித்தி பெற்று பிராணனைத் தலையில் கொண்டுபோய் வைத்துக் கொண்டு, அதனல் மூளை தெளியப் பெற்றவர்களுக்கு அது சொன்னபடி கேட்கும். மற்றவர்கள் மனதை யடக்கும் வழி அறியா ராதலால் மூளையும் அவர்களுக்குச் சொன்ன படிகேட்காது. மனதை விட்டுவந்த ஒரு எண்ணம் மூளையின் வழியாக வெளியாகுமுன் மூளைக்கு ஒரு இடுக்கண் நேர்ந்தால் அந்த எண்ணம் அணைபோட்ட வெள்ளம்போல் அப்படியே தடைப்பட்டுநின்று அவ்விடையூறு நீங்கியதும் தடைப்பட்ட விடத்திலிருந்து பிரவிருத்திக்கும். மனிதன் எந்த எண்ணத்தை மனதிற்கொண்டு சாகிருனே அந்த எண்ணப்படி மறு ஜந்மமெடுக்கிறன் என்னும் உபதேச உண்மையின் இரகசியமும் இதுவே. இதற்கு உதாரணமாக ஒரு விருத்தாந்தத்தை நாம் படித்த ஒரு பத்திரிகையி லிருந்தெடுத்துக் கீழே வரைகிறேம். இந்த சம்பவம் அனேக வருஷங்களுக்கு முன் நடந்ததானுலும் அதன் உண்மை உண்மையே.

"மத்திய தரைக்கடலில் நடந்து கொண்டிருந்த ஒரு கப்பற் சண்டையிலே அதி வீராவேசத்துடன் போர்புரிந்து கொண்டிருந்த ஒருவன் சிரஸில் குண்டு ஒன்று தாக்கியது. உடனே அவன் பிரக்ஞையற்றுக் கீழே விழுந்தனன். பிராணன் முற்றும் நீங்கிய பிரேதம் போல் அவனிருந்திருப்பானுகில் அவனை உடனே அடக்கஞ் செய்திருப்பார்கள். சுவாசப்பை, இரத்தாசயப்பை முதலியவற்றின் இயக்கக் குறிகள் வெளியே காணப்பட்டபடியால் அவனை அங்கிருந்த இராணுவ வைத்திய சிலர்கள் ஜிப்ரால்டருக்கு அனுப்பினர்கள். அவ்விடத்தில் தேஹ தத்துவ சாஸ்திரத்திலே மிகவும் பாண்டித்தியம் பெற்ற சில வைத்தியர்கள் பலவாறுக முயன்றும் அவன் அதே ஸ்திதியிலிருந்தான். பிறகு அப்பிணியாளனை வைத்திய பரிசிலர்கள் இங்கிலாந்துக்கு அனுப்பினர்கள். அவ்விடத்திலே சில மாதம் வரையில் சரீர அங்கதருமங்கள் மாத்திரம் இயங்கிக் கொண்டிருந்தும் அவன் பிரக்ஞை தப்பின நிலையிலேயே யிருந்தான். இந் நிலைமையிலேயே ஒரு வருஷத்துக்கு மேற்பட்டு அவனிருந்தும் எவ்வகைப்பட்ட சிகிச்சையும் அவன் விஷயத்தில் பயன்பட்டிலது. இந்தப்படியிருக்கையில் கபால லக்ஷண வித்தையிலே அதிக பாண்டித்திய மடைந்து நுட்பபுத்தி யமையப்பெற்ற ஒரு ரணவைத்தியர் அப்பிணியாளியின் கபாலத்தைச் சோதித்துப்பார்க்கையில் அவனுடைய மூளையில் ஒரு எலும்புத்துண்டு அழுந்திக் கிடந்ததைக் கண்டார். அவர் அதனை அதற்கேற்ற இரண வைத்தியக் கருவியைக்கொண்டு மெல்லத் தூக்கிவிட்ட வுடனே அவனுக்குப் பிரக்ஞை வந்தது. அப்போது அருகிலிருந்த யாவரும் வியக்கத்தக்க ஒரு அற்புதம் நிகழ்ந்தது. மேற்கண்டபடி அப்பிணியாளியின் கபாலத்தில் குண்டு தாக்கியபோது அவன் தன் கூட்டாளி ஒருவனை நோக்கிச் சத்துருக்களின் மரக்கலங்கள் சிலவற்றைப் பிடிப்பதற்கேற்ற வழிவகைகளைக் குறித்துப்பேசிக் கொண்டிருந்த வாக்கியத்தைப் பூர்த்தி செய்வதற்கு முன்னர் இடையில் குண்டுதாக்கிய காரணத்தால் அவனுடைய மூளைக்குப் பங்கம் நேரிட்டபடியினலே அவ்வாக்கியம் முடிவு பெறுமல் அம்மட்டிலேயே நின்றிருந்தது. மூளையை அழுத்திக் கொண்டிருந்த எலும்புத்துண்டு மேற்கண்டபடி எடுபடலும், அப்பிணியாளி அவ்வாக்கியத்தின் எஞ்சிய பாகத்தைச்சொல்லி முடித்தான். அவ்வாக்கியத்தில் எஞ்சி நின்ற பாகம் பிரக்ஞை வந்த வுடனே அவனிடத்துண்டாகிய முதற் செய்கை. இடையில் ஒரு வருஷத்துக்கு மேற்

பட்டுக் காலங்கழிந்ததைக் குறித்தும் அவனுடைய தேஹத்துக்கு விளைந்தனவற்றைக் குறித்தும் அவனென்றும் அறிந்திலன். இடையில் விட்டுப்போன வாக்கியத்தை முடிக்குந் தொழிலையுடைய மூளை நரம்புகள் விட்ட குறையை ஒரு வருஷமாகியும் மறவாதிருந்தது ஆச்சரியம்."

இப்படியாக ஸ்தூலத்தில் நேர்ந்தது சூக்ஷ்மத்திலும் உண்மையே. "நினைப்பு மறப்பும் பிறப்பு மிறப்புமாம்" என்றபடி சங்கல்பமே பிறவிக்குக் காரணம். சங்கல்ப நாசமே பிறவி வேரறுக்கக் காரணம். ஆகையால் யோகிகள் மனதை யடக்கி (சித்தவிருத்தி நிரோதஞ் செய்து) சங்கல்ப நாசஞ்செய்யப் பார்ப்பார்கள். லம்பிகா யோகத்தால் மனம் இந்திரியங்களின்வழி புறம்போகாது கபாடவாசலை மூடிக்கொண்டு, விட்ட கர்மத்தைத் தொட்டுச்கொண்டு இருவினை நேரொப்ப உழைப்பார்கள். சங்கல்பத்தை விகல்பத்தால் கெடுத்து, விகல்பத்தை நிர்விகல்ப சமாதியால் ஜயிப்பார்கள். நிர்விகல்பத்திலிருந்து சகஜ சமாதிக்கு வருவார்கள். அப்பொழுது அவர்கள் உள்ளும் புறமும் ஒத்து விதேஹ கைவல்ய ஸித்தி பெற்றவராய் புளியம்பழமும் ஓடும்போல் தேஹத்திலிருந்தும் அதில் அபிமானம் வைத்து ஒட்டாது தாமரையிலையில் தண்ணீர்போல் ஜீவன் முக்திநிலையிலிருந்து (அதாவது விதேஹ கைவல்யம் பெற்றும் ஸதேஹ முக்தராய்) வாழ்வார்கள்.

---

## Health is Wealth.
## ஆரோக்கியமே பாக்கியம்.

—:(o):—

இதைத் தழுவியே நமது தேசத்தில் 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்னும் பழமொழியும் ஏற்பட்டிருக்கிறது. செல்வத்தில் கல்விச் செல்வமென்றும் பொருட் செல்வமென்றும் இரண்டு வகையான செல்வங்கள் இருந்த போதிலும், இவ்விரண்டினைக் காட்டிலும் பெருத்த செல்வமென்றிருப்பது தேகாரோக்கியதோடு இருப்பதேயாம். செல்வம் இருந்தாலல்லவோ தேகாரோக்கியத்தைப் பாதுகாத்துக் கொள்ளலாம் என்று சிலபேர் கேட்கக்கூடும். அப்படிக்கேட்போர்க்கு யாம் சொல்லுவதொன்றுண்டு. செல்வம் படைக்க விரும்புவோர், தாம் முதன் முதல் தேகாரோக்கியத்தையே பெரிதாய் நினைத்து, அதன் வழியாக உலகத்தில் தினசரி நடைபெறும் எண்ணிறந்த வ்ருத்திகளில் கவனஞ் செலுத்திச் செல்வ வந்தராக முன் வரலாம். ஆதலால் தேகாரோக்கியத்திற்கும் செல்வத்திற்கும் பரஸ்பரம் சம்பந்தமிருப்பதனாலேயே ஒன்றைத் தழுவி மற்றொன்றை விடுவதென்று சொல்லுவதற்கில்லை. ஆதலால் எவருக்கும் ஆரோக்கியம் அவசியமென்று நிதர்சனமாய் ஏற்படுகின்றது. இந்த ஆரோக்கியத்தை ஜனங்கள் பலவிதமாய்ச் சம்பாதித்துக் கொள்ளக்கூடும். சரீரபலம், மனோபலம் ஆகிய இவ்விரண்டும் ஒருவனிடம் குடிகொண்டிருக்குமாயின், இயற்கையாகவே அவன் பாக்கியவந்தனாய் விடுகின்றான். ஒரு குடும்பத்துக்குத் தலைவனாயிருப்பவன் இம்மாதிரியான பாக்கியவந்தனா யிருந்தாலன்றி அவன் செல்வம் படைத்தவனாக மாட்டான். செல்வவானைக் குறித்து யாம் ஒருவிசை பேச நேரிட்டபோது: எம் நண்பரொருவர் கூடி வாழ்தலே குடும்பத்திற்குப் பலமென்றும், இம்மாதிரியான குடும்பங்களே நகர வாழ்க்கைக்குப் பலமென்றும், இம்மாதிரியான நகர வாழ்க்கையே நமது இந்தியஜாதிக்குப் பலமென்றும் குறிப்பிட்டார். எனினும் இவைகள் அனைத்தும் பலமாகமாட்டாது, சூக்ஷமமாய் இதைக் கவனிப்போமாயின் இது உண்மையாய்த் தோன்றும். ஆனால் ஸ்தூலமாய்க் கவனிப்பதே உலகத்திற்குரிய சாக்ஷியமாகும். ஒரு மனுஷ்யனுடைய தேக ஆகிருதியையும், நடைமுதற் பழக்கத்தில் அவன் அப்பியஸித்துவரும் அநுஸாரணையை

யும் இக்காலத்து வைத்தியர்கள் பார்த்து ஆரோக்கியஸ்தனென்றாவது திடசரீரி யென்றாவது குறிப்பிடுகிறார்கள். கண்களைப் பார்த்துச்சொல்வோர் சிலர்; தேகவளர்ச்சியைப் பார்த்துச் சொல்லுவோர் சிலர். நகவளர்ச்சியைப் பார்த்துச் சொல்வோர் சிலர்; ஒருவனுடைய தேகத்தில் ரத்த ஓட்டம் இருக்கிறதென்றும் வியாதி வெக்கை யில்லாமல் ஜீரணசக்தி சம்பூர்ணமாயிருக்கிறதென்றும் தெரியவேண்டின், அவனுடைய கை நகங்களையும் கால் நகங்களையும் கவனித்துச் சில வைத்தியர்கள் சொல்லுகிறார்கள். இது பெரும்பாலும் இந்தியாவில் சகஜமாயிருக்கிறது. ஜப்பான் தேசத்திலோ வேறுவிதம்; ரோமத்தையும், அது வளரும் விதத்தையும், அது கொண்டிருக்கும் நிறத்தையும் கண்டு அவனுடைய தேகக்கூற்றைத் தெளிவாய்ச் சொல்லிவிடுகிறாராம். அவர் பரிசிலனைசெய்து குறிப்பிட்டுள்ள இரண்டொரு அம்சங்களைமட்டும் இதனடியிற் குறிக்கிறோம். சரீர சுகம் குறையுமானால் ரோமம் அடர்ந்தும் நீண்டும் வளராது. ரோமங்களின் குறுக்களவைக்கொண்டும், வழுக்கை விழுந்திருப்பதைக் கொண்டும் கண்டறிய முடியுமாம்; தலையில் வளரும் ரோமங்களின் நுனியில் பிளவுபட்டிருப்பதும் ஸௌக்கியக் குறைவையே வெளிப்படுத்துகின்றது. இதுபோன்ற இன்னுமனேக சிறிய அம்சங்களும் இருக்கின்றன. இப்போது தெரிவித்ததுபோல இந்த ஜபானிய பரிசோதகர் மற்றுமுள்ள அநேக நுட்பமான விஷயங்களை விளக்குவாரென்று நம்புகிறோம்.

---

Press Opinion.

## The Proposed Tamil Lexicon by Govt.

## கவர்ன்மெண்டார் வெளியிடப்போகிற தமிழ் அகராதி.

:(*):

இப்போது கவர்ன்மெண்டாரது ஆலோசனையிலிருக்கும் தமிழ் அகராதிக்காக ஸர்க்காரவர்கள் லட்சரூபாய் செலவு செய்ய இசைந்திருக்கிறார்கள். இதைத் தயார் செய்வதற்காக ஐந்து பேர்கள் அடங்கியதொரு கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது. இந்த அகராதியின் விஷயமாக 'டாகா' என்று கையொப்பமிட்ட ஒரு நண்பர் சென்னை 'ஹிந்து'ப் பத்திரிகையில் நீண்டதோர் வியாச மெழுதியிருக்கிறார். அவர் எழுதுவதன் சாராம்சத்தை மட்டும் இவ்விடத்தில் குறித்திருக்கிறோம். மேலே குறிப்பிட்ட கமிடியார்களில் இரண்டு மெம்பர்கள் பாதிரிமார்களாவர்; அவர்களாலேயே வேறிரண்டு மெம்பர்கள் நியமனம் பெற்றிருக்கிறார்கள். மதிராசு யூனிவர்ஸிடியார் ஐந்தாவது மெம்பரைத் தெரிந்தெடுத்து நியமிக்கப் போகிறார்கள். இந்தமாதிரியான பெருத்த முயற்சிகளில் கவனஞ் செலுத்தி யுழைப்போர், அம் முயற்சிக்கு அதி அவசியமாயுள்ள தமிழ்ப்பாஷையைக் கசடறக் கற்று விசேஷ பாண்டித்திய முடையவரா யிருத்தல் வேண்டும். மேலே சொன்ன பாதிரிமார்கள் இருவரும் அவர்களால் நியமிக்கப்பட்ட வேறிரண்டு மெம்பர்களும் தமிழ் பாஷா விற்பன்னர்களென்று யாம் கேட்டதில்லை. இப்போது அபாரமாய்ப் பெருகி வளர்ந்துகொண்டிருக்கும் தமிழ்ப் பாஷையில் ஏற்கெனவே இருக்கிற அகராதிகளை யெல்லாங் காட்டிலும் தற்போது ஆலோசனையிலிருக்கிற அகராதி பெரிதும் பயன்படுவதாயிருக்க வேண்டுவதனாலே தமிழ் பேசுவோரின் அப்பியாசத்திலிருக்கும் பேசும் நடையையும், புத்தகரூபமாய் வெளிவருவதற் குரித்தான எழுதும் நடையையும் பின்பற்றி அமைப்பது நலமாகும். இப்படி உபயோகிப்பதில் அந்தந்தப் பதங்களுக்கு வியாக்கியானமாய் அர்த்தங்களை யெடுத்துச் சொல்லும்போது அநாவசியமானதும் கறடுமுறடானதுமான பதங்களை உபயோகிப்பதும், பிரித்துச் சொல்லக்கூடியவைகளைச் சந்தியாகச் சேர்த்துச் சொல்லுதலும் கூடாது. இந்த ஆலோசனையிலிருக்கும் அகராதியை இரண்டு பிரிவுகளாய்ப் பிரித்து ஒன்றைத் தமிழ் பிரதி

பதங்கள் காணப்படும் அகராதி யாகவும் மற்றொன்றை தமிழ் வார்த்தைகளுக்கு இங்கிலீஷ் வார்த்தைகளான அர்த்தங்கள் காணப்படும் பிரிவாகவும் செய்யப்படலா மென்றும், தமிழில் உபயோகிப்படுகிற சமஸ்கிருத பதங்களையும் மேற்படி பதங்களின் மூலாதாரமாய் வைத்துக் கொண்டு கிரந்த எழுத்துக்களில் அவைகளைக் காட்டலாம் என்றும், அநேகத் தொடர்மொழிகளும் புராதனவார்த்தைகளும் இப்போது தமிழில் அவ்வளவாக இவ்விடங்களில் பிரயோகிக்கப்படா விட்டாலும் சிற்சில இடங்களில் அவை பெரிதும் பேசி வழங்கப்பட்டு வருவதனாலே, அத்தியாதி தொடர்மொழிகளைத் தேடிப்பிடித்து இந்த அகராதியில் அமைக்கவேண்டுமென்றும், பூதபௌஷ்ய ரசாயன சாஸ்திரங்களையும் தொழில் முறைகளையும் பற்றிய பிறதேச வார்த்தைகள் இப்போது மிகுதியாய் ஜனங்களால் வழங்கப்பட்டு வருவதனாலே அவைகளையும் அவைகளுக்குத் தகுந்த பண்டை நூற்பதங்களையும் திரட்டி யெடுத்து இந்த அகராதியில் பதிப்பிப்பது உசிதமாகுமென்றும் அவர் தெரிவிக்கிறார். இவையனைத்தும் அவலம்பிக்கப் படுமிடத்து, இவ்வகராதி தமிழருக்குப் பெரிதும் உபயோகமாகுமென்று நம்புகின்றோம்.

இந்த அகராதியின் சம்பந்தமாக பாளையங்கோட்டையில் சைவசபைக் காரியதரிசியின் விளம்பரத்தை முன்னிட்டு சமீபத்தில் ஒரு மீட்டிங் கூட்டப் பெற்றபோது, இந்த அகராதிச் சபை கமிடி மெம்பர்களில் ஒருவராயிருந்த ஸ்ரீமான் பாண்டித்தொரைத் தேவர் ஸ்தானத்தில் தாம் தெரிந்து குறிப்பிட்ட 11 பேர்களில் ஒருவர் நியமிக்கப் படலாமென்று ஒரு தீர்மானங் கொண்டு வந்திருக்கிறார்கள். இந்தப் பதினொரு பேர்களில் சென்னை கிறிஸ்டியன் கலாசாலையிலிருக்கும் திருமலைக் கொழுந்து பிள்ளையும் ஒருவரென்று தெரிய வருகிறது. இப் பெயர்கொண்டவர் யாமறிந்த வரையில் சென்னை கிறிஸ்டியன் கலாசாலையில் இருப்பதாக எமக்குத் தெரியவில்லை. இதன்றியும், தமிழ் பாஷாபிவிருத்தியையே பெரிதும் பாராட்டி, தமிழுக்கே உழைக்க வேண்டுமென்னும் பேராவல் கொண்டுள்ள பதினொரு பேர்களைப் படிப்படியாய்க் குறிப்பிட்ட இச்சபையாரது மீட்டிங்கில், தமிழுக்காக உழைத்து வருபவரும் தமிழ்ப் பாண்டித்தியம் படைத்தவரென்று நம் கவர்ன்மெண்டாரால் பட்டங்கொடுத்து கௌரவிக்கப் பட்டவருமான ஸ்ரீமான் மஹாமஹோபாத்தியாயர் உ. வே. சாமிநாதய்யரவர்களின் ஞாபகம் அவர்களுக்கு அச்சமயம் வராமற்போனது எமக்கு மிக்க ஆச்சர்யத்தை யுண்டு பண்ணுகிறது. —இந்து நேசன்.

:o:

## ஸங்கீத ரத்னாவளி.

:(✻):

வால்யம் 1.

(இது ஸ்ரீமான்களான கே. வரதாசாரியார், கே. வி. ஸ்ரீனிவாஸய்யங்கார், வீணை கிருஷ்ணமாசாரியார் ஆகிய இம்மூவரும் சேர்ந்து இயற்றியது. விலை ரூ. 3. சென்னை தாதா முத்தியப்பன் தெரு, 17-ம் நம்பரிலிருக்கும் சங்கீத வித்வான் ஸ்ரீமத் கே. வி. ஸ்ரீனிவாசய்யங்காருக்கு எழுதிக்கொள்ளலாம்.)

ஸங்கீத ரத்னாவளி யென்னும் பெயர் கொண்ட இவ்வருமையும் பெருமையும் வாய்ந்த இம்மாதிரியான புஸ்தகத்தைப்போல இது பரியந்தம் வேறொரு புத்தகம் வெளிவந்ததாகத் தெரியவில்லை. அனேக வித்வான்கள் தத்தம் அனுபவத்தையும் ஸங்கீத உலகத்தின் நடைமுதற் பழக்கத்தையும் அனுஸரித்து சங்கீதப் பயிற்சிக்கான நூல்களை எழுதிப் பிரசுரித்திருக்கிறார்களாயினும் இப்போது நம்முன் வந்திருக்கும் இந்த ஸங்கீத ரத்னாவளியைப் போன்ற ஆராய்ச்சிகொண்ட நூல் ஸங்கீத உலகத்தில் அரியதாயிருக்கிறதென்பதை எவரும் மறுக்கமாட்டார்கள். ஸங்கீத சாஸ்திரத்தில் அபிலாஷை யுடையவர்களும், சங்கீதப் பயிற்சியுடையவர்களும், சங்கீதத்தில் ஆர்வமுள்ளோரும் இப்படிப்பட்ட புஸ்தகத்தைப் பார்த்துப் பெரிதும் ஆனந்தப்படுவது திண்ணம். யாம் இந்தப் புஸ்தகத்தை ஒருவாறாய்ப் பார்த்த மட்டில் இதன்கண் கிரந்த கர்த்தர்கள், பணத்தையும் தம் தேகசிரமத்தையும் ஒரு பொருட்டாய்க் கருதாமல் ஸங்கீத வித்தியார்த்திகள் மனமுவந்து அப்பியசிப்பதற்குரிய இலக்கணச் சுருக்கத்தையும் அப்பியாசங்களையும் வெகு தெளிவாய்க் குறிப்பிட்டிருக்கிறார்கள் என்று தெரியவருகிறது. இப்போது வழங்கிவருகிற இனிமையான கீர்த்தனங்களையும், ஸ்வரஸாஹித்திய ரூபமாய்த் தாளம் முதலியவற்றிற்கு அடையாளங்களமைத்து யாவருக்கும் எளிதில் விளங்கும்படி எழுதியிருக்கிறார்கள். இதில் ஹார்மோனிய படமொன்றும் அதைச்சேர்ந்த விஷயமும் பயிலுவோர்க்கு எளிதில் விளங்கும்படியாயும் குறிப்பிட்டிருப்பது நிரம்ப நன்றாயிருக்கிறது. இதை ஸங்கீதப்பிரியர்களும் மற்றோரும் அன்புடன் வாங்கி வாசித்துப்பயின்று நற்பயன் பெறுவாராக. இதைப்பற்றி இன்னும் விரிவாய் மற்றோர் முறை எழுதுவோம்.

## The Supreme Legislative Council.

### H. E. The Viceroy's Memorable Speech.

*(27th January 1913.)*

—:*:—

"Although I have not yet recovered from my wounds and have been compelled under doctor's orders to abstain from all public business of every kind, I have felt it was my duty to come here to-day to open the first session of my Legislative Council in Delhi and to give a cordial welcome to the newly elected and newly appointed members of my Council. I am sure that at the same time none of you will begrudge me an expression of regret for those who have not returned since after years of loyal and active co-operation with my Government in the Legislative work of the Government of India. I regard them not only as former colleagues in Council but also as friends. I am delighted to see some of the former members of my council again in their places, and I am confident that they will again bring to our Council the same spirit of harmony, goodwill and legislative ability as during the past two years that I have had the honour of presiding over their deliberations. As regards the new Members of my Council I bid them a cordial welcome, and I am sure that I can count on them to maintain the same high standard of dignity in debate as has so markedly distinguished our deliberations in the past. I feel deeply grateful to you all for the warmth of your reception here to-day. I always knew that I could count on your sympathy in the suffering that has been my lot during the past few weeks, and if there has been one thing that has tended to alleviate those sufferings, it has been the knowledge of sympathy shown towards me by all classes, creeds and communities throughout the length and breadth of India. I should like to take the opportunity when addressing my Council, who represent the whole of British India, to express my profound gratitude for the genuine outburst of sympathy, the devout prayers and good wishes that have been heard on every side and, if I may be allowed to say so, I feel convinced that those prayers have not been unanswered. When five weeks ago I had recovered consciousness and was able to think over what had passed, my feelings were in the first instance those of profound gratitude to the Almighty God for his merciful protection of Lady Hardinge and myself, of real grief for the poor man who had lost his life in the performance of his duty, of deep disappointment that it were possible that such misguided men as those who plotted and committed such a useless crime could now be found in India and of sorrow at the thought of the injury to the sentiments of the whole of the people of India who would, I knew, regard with horror and detestation the perpetration of a crime which is contrary to their own precepts and instincts of humanity and of loyalty as well as to their religious principles. The gratitude that I felt at the miraculous preservation by the Almightly of Lady Hardinge and myself from the hand of the assassin was, I know, also deeply felt throughout India, but words fail me when I think of the cruel murder of those humble people who were ruthlessly killed and I deeply deplore the loss which their families have suffered. In my desire for kindly intercourse with the people and accessibility to them I have always discouraged excessive precautions, and I trusted myself and Lady Hardinge more to the care of the people than to that of the Police. If it was an error it is an error that I am proud of and I believe it may yet prove not to have been an entirely mistaken

confidence, for out of evil good may come. Is it too much to hope that the storm of public indignation evoked at the outrage may give Indian terrorists cause for sensible and humane reflection and repentance. It is difficult to believe that these individuals are a class apart and that they do not belong to the communities and mix with their fellow beings. Are they really susceptible to no influence and no advice? Have they no contact with moderate and wiser men? Still, whatever I may feel on the subject of the crime itself, I only wish to assure you and the whole of India that this incident will in no sense influence my attitude. I will pursue without faltering the same policy in the future as during the past two years. and I will not waver a hair's breadth from that course. What I have said so far has been somewhat of a personal character but I have one word more to say to the people of India which I say with a profound sense of the gravity of the import of my words. I need hardly recall to the memory of anybody that the recent incident is not an isolated episode in the history of India but that during the past few years, both Indians and Europeans, loyal servants of the Government of India who have been less fortunate than I have been and undeserving of the cruel fate meted out to them, have been stricken down by the hand of the assassin. These deplorable events cast a slur on the fair name of India, and the Indian people to whom I know they are thoroughly repellent, and I say to the people of India not merely as a Viceroy intensely jealous of the honour of the country that he has been called upon to govern but as one of the many millions in India of the fellow subjects of our King-Emperor and one who loves India and the Indian people amongst whom he is living, a say that this slur must be removed and the fair fame of India must be restored to a high and unassailable plane. Knowing by the kindly and genuine manifestations of sympathy received from every side how profoundly repulsive such crimes are to the people of India. It may be asked what remedy can be applied to prevent their recurrence. To this I would reply that such crimes cannot be dismissed as the isolated acts of organised conspiracies in which the actual agent of the crime is not always the most responsible. The atmosphere which breeds the political murderer is more easily created than dispelled. *It can only be entirely and for ever dispelled by the display and enforcement of public opinion* in a determination not to tolerate the perpetration of such crimes and to treat as enemies of society not only those who commit crimes but also those who offer any incentives to crimes. Amongst such incentives to crime should be included every intemperance of political language and methods likely to influence ill-balanced minds and lead them by insidious stages to hideous crimes. The universal condemnation throughout the whole of India of the crime of the 23rd December and the anxiety shown for the detection of the criminals have, however, filled me with hope for the future and have inspired me with confidence in the determination of the people of India to stamp out from their midst the fungus growth of terrorism and to restore to their beautiful Motherland an untarnished record of fame. Imbued as I am with this hope and confidence, my faith in India, its future and its people, remains unshaken and if, as I confidently anticipate, the realisation of my faith is confirmed then I may add that the two innocent lives so sadly lost on the 23rd December will not have been sacrificed in vain."

# The Wife's Lament and Sati's Prayer.

—(*)—

*Refrain*:—"Hurled from the housetop, my husband fell, O Devi!
The boon of wifehood grant, prithee, a *Sati's* prayer, sure,
Thou will not refuse,

*Chorus of Voices*: "It was all in broad daylight, O Mother!
And they saw it all, witness our voices.

1. O Love, that at freedom's height on housetop stood
"Thy life I'll take, be sure" he said
And jumping over the gaping void to housetop high
He, the ruffian hurled thee down, alack!
—*Refrain* and *chorus*.

2. Mean men that to wisdom's height could never climb
Nor bear to see others in heaven-topped houses live
Could they in lowly houses living climb up its roof
And a terror prove to all!
—*Refrain* ahd *chorus*.

3. The ruffian that by wanton mischief killed
The darling that for ten months I bore
Hath dared to aim at the life of him
Who to ME is the source of Life.
—*Refrain* and *chorus*

4. O Thou, my Lord, that while building thy earthly Home
The Heavenly Home, along with it, would build and live!
Could wicked men thy holy form or name and fame
With their soiled hands touch and live!
—*Refrain* and *chorus*.

5. As if the Matchless Star of Heaven †
Its fixed abode did leave and fall
My life's star that within my eyeballs steadfast shone
Alack! I saw it fall—the light of my eye is gone!
—*Refrain* and *chorus*.

6. O Thou, the Light of mine Eye, its gem, lifeless thy form it lies:
It takes my life out to see thy lifeless form;
The mother that bore thee in heart-rending cries appeals,
And the little child born of thy flesh cries its life out in grief.
—*Refrain* and *chorus*.

7. Once before in the history of this ancient land
Kannaki's husband they charged him with theft
And the *King* his life did take 'according to law'
Thus my husband they charged him with theft and took his life.
—*Refrain* and *chorus*.

† Dhruva or The Pole Star. அருந்ததி நக்ஷத்திரம்=துருவன்.

8. The *Sati* that her lord found lost that day
The Goddess of wifehood within her bethought and asked Her
Invoking, "Is my husband a thief?"—Alack!
My heart in tremulous'motion sinks and my life ebbs out to think of it,
—*Refrain* and *chorus.*

9. O Goddess bright that on that day when *Kovalan* fell
To the helpless wife that invoked Thee thou madest thy presence felt
To Thee, Great One! in accents loud I appeal today
Make thy presence felt and bear witness to Truth.
—*Refrain* and *chorus.*

10. My lord to me my only refuge I thought Thou knowest
O Goddess chaste of Sacrificing self I take refuge in Thee!
My husband's life, a boon to me I ask of Thee
Pray grant me the boon I ask and refuse it not.
—*Refrain* and *chorus.*

11. The boon of wife-hood again I ask of Thee
Refuse me not! O Thou in grace do grant my boon
Thought of ill to none I entertain, Thou knowest,
The God of Fire my witness be and guard!
—*Refrain* and *chorus.*

12. O Goddess of chastity, Thy lotus feet
Alone I know and my only refuge take!
None other refuge I have, thou knowest,
O Goddess chaste, grant me thy child refuge!
—*Rrfrain* and *chorus*

13. It was the day dedicated to Mars, the God of war and strife;
The Sun in the house of capricorn, a monster half-animal, half-fish
Abiding stood, while the New moon in the Sun would merge next morn;
O Grant me, Goddess, my boon of wifehood ere dawn!

14. To the Newmoon festival alas! the Mother
That to Tiruvallur would go
And there in the Holy waters bathe
Her life she finds ebbing out to see her son prostrate!

15. O Thou, Fifteen-lettered Mother! in Truth and Spirit
My husband worshipped Thee! If Thou in gladness
His worship did accept and grant him thy Grace,
I implore Thee, O Mother, my husband to me instant restore.

16. The Lord and Lady—Sankara-Parvati--witness bear,
Imbued with the Spirit of True Sacrifice I fall at thy feet and pray:
O Mother! grant me my boon and my husdand guard!
In thy Sixteen-lettered Form of Perfection would I my constant worship render to Thee!

*Sriyaim (I'm Sri)*

## At the Altar-Fire of Consciousness.

### "Vox Populi Vox Dei."

MOTTO:—(1) "Behind all experiences moves one Great aspiring Power, developing and perfecting the World."

(2) "Every slight experience will teach us something if we question it, and will yield its message of Hope."

(3) "There is a Power on Earth greater than Parliament or King and that is the Voice of Consciousness."

## THE HOLY RESPONSE.

### [Sequel to "the Wife's Lament and Sati's Prayer."]

Within *forty-eight hours* of the heart-melting cries and lamentations which rent the air in what may be called the "White-Friars" of South Madras "in this city of intrigue" —forlorn and faithless alas! to its own *true self*—"the Wife's Lament" has reached the straining ears of Britannia Fair nestling far away in her Island Home; and She, the theme of "Rule Britannia, Rule!" has with her accustomed tone and inherent voice of diginty, sent this Holy Message of Hope to the oppressed through channels peculiarly her own. "Let the Current knows its Way."

It is extracted from a communication bearing date, 6th February, and posted, be it noted, exactly at the hour when, 48 hours previous, the Cry of distress addressed to the Goddess of wife-hood came out to impress itself on the sands of Time, Seven thousand miles away from where the writer of this Divine Message of Hope was physically present. We feel ourselves in duty bound to place it reverently at the Altar of Public Opinion in obedience to that soul-stirring call of Social Duty, which the Viceroy with the Voice of Faith uttered in pain and sorrow with his hand held up in a sling. God grant that the strangled voice of Public Life may yet gather strength from the Inner Voice of Consciousness and assert itself above the over-powering influences of Intrigue and what not, is the earnest and heart-felt prayer of all true men which they hope to see realised.

"My dear Mr. Swaminatha Aiyar,—I was interested in all that you told me of your experiences some of which have been the very reverse of agreeable. I am quite sure that you stand high in the estimation of those of your fellow-townsmen who know your work and your zeal for the public good. Unfortumately those who devote their time and energies to the public without seeking reward, very often experience opposition from those who know nothing of self-denying effort. It is very ignoble that persons who have only their own private interests to serve, should not only not be content to leave men with public interests to carry out their ideas without interference, but should place themselves in active opposition to public benefactors.

"I hope the New Year has opened auspiciously with you and that those who have hitherto caused you trouble, will no longer interfere with you.

"I trust you will find encouragement in your work from Lord and Lady Pentland, who have ever been known to side with those who have the interests of the public at heart.

"Thanks for the copy of "the Divine Song of Empire" and all the other slips you sent me along with the November *Vivekachintamani.—With all good wishes.........*"

---

## The "Vivekachintamani."

The October number of this interesting and instructive Tamil Magazine opens with a spirited article which affirms the truth of the principle in the Maxim "the undedicated life and undisciplined mind lead to evil." It is followed by an interestihg sketch of Sri Sankara "The Orphan's Cry" is highly spiritual in its tone as also the article on A O. Hume. Under the headline, "The Kinglom of God within,"the Origin of Life"is discussed with an intellegent grasp of the first principles involved. Other articles of interest are :—"Wisdom is all-powerful," the constitution of Man; Easy Lessons in Economics; Historical Selection; and Gleamings from Folklore.

The magazine, we are glad to note, is maintaining its unique position as a journal of recognised spiritual and moral force, and we foresee a large scope for its usefulness in the moral and spiritual line, in which it stands foremost. The publishing agency deserve a word of commendation for their zeal in working up the journal to its original position—*The Indian Patriot.*

## Press Opinions on the Viveka Chintamani.

:-i

THE "VIVEKA CHINTAMANI."—This useful and interesting Tamil Magazine for December opens with an article on the Principles of Progress, reviewing Professor Henderson's last lecture in Madras. It is followed by an article on the 'Origin of Life' in its collective aspect and another on 'Kartikai Festival.' The verses celebrating the birth of Kumara under Kumarasambavam are touching. The magazine is as usual full of a number of other interesting stories and contributions keeping its position as the oldest and the best Tamil monthly in Madras.

*The Madras Standard Dec. 13.*

The magazine is.........keeping up its position as the oldest and the best Tamil Monthly in Madras."

*—The Indian Patriot.*

# PONNUSAWMY PILLAI & SON,

## 40, 41, 42, Rattan Bazaar Road,

## MADRAS.

நார்க்காலிகள், மேஜைகள், பீரோக்கள், கட்டில்கள், இன்னும் என்ன மர ஸாமான்கள் வேண்டுமானாலும் அனுப்பக்கூடும். எஜமானரே நேரே பார்ப்பதாலும், நல்ல மரத்தையும் தகுந்த தச்சர்களையும் கொண்டு வேலை செய்வதாலும் விலை மலிவாய்க் கொடுக்கக்கூடும். விலை கேட்லாக் வேண்டியவர்களுக்கு இனாமாக அனுப்பப்படும்.

**பொன்னுசாமி பிள்ளை அண்ட் ஸன்,**

40, 41, 42, பெரம்புக்கடைத் தெரு.

ஜார்ஜிடவுன், மதராஸ்.

---

இனாம்! இனாம்!! இனாம்!!

விலையுமில்லை தபாற் செலவுமில்லை.

## போலிச் சரித்திரம்.

வர்த்தக சம்பந்தமான சிறுபுத்தகம். இப்பொழுதுதான் வெளியாகியது. வாசிப்பதற்கு வெகு விநோதமாயுள்ளது. தமிழறிந்தோர் ஒவ்வொருவரும் வாசிக்கத்தக்கது. பொது நன்மையைப் பெரிதுங்கொண்டுள்ளது. விலாசத்தைத் தெரிவிப்போருக்கு இனாமாய் அனுப்பப்படும்.

வைத்திய சாஸ்திரி

மணிசங்கர் கோவிந்தஜி,

ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம்,

22, பிராட்வே மதராஸ்.

ஏஜண்டு:

M. A. நெல்லையப்ப முதலியார்,

38, சின்னகடைத்தெரு,

திருச்சினப்பள்ளி.

## "இந்து நேசன்"

—(*)—

இது வாரம் இரு முறை, அதாவது பிரதி திங்கட்கிழமையிலும் வியாழக்கிழமையிலும் பிரசுரமாகி வரும் இனிய செந்தமிழ்ப் பத்திரிகை. இதில் கல்வி, கைத்தொழில், விவசாயம் இராஜாங்க விஷயங்கள், வியாபாரம், சுகாதார விதிகள், நற்குண நற்செய்கைகள் மிகுந்த பெரியோரது சரிதங்கள், உள்ளூர் வெளியூர் வர்த்தமானங்கள், பொது நலக்குறிப்புகள், கோர்ட்டு விஷயங்கள், பாலர்க்கும் பாலிகைகளுக்கும் உபயோகப்படத்தக்க விதிகள், மத விஷயங்கள், சுருங்கச் சொல்லின் தேச க்ஷேமாபிவிருத்திக்குரிய சகல அம்சங்களும் பொருந்தி, ராஜபக்தி ராஜ விசுவாசம், முதலியனவற்றுள் பற்றுண்டாகும்படி, எளிய செந்தமிழ் நடையில் தகுந்த கல்வியாளரால் எழுதி நடத்தப்பட்டு வருகிறது.

வருஷ சந்தா ரூ 5; ஆறுமாஸ்க்கு ரூ 2-8-0

மானேஜர் 'இந்துநேசன்'

18, லிங்குசெட்டி வீதி, ஜார்ஜ் டவுன்

சென்னை.

## ஸ்ரீமத்வால்மீகி இராமாயண வசனம்.

பண்டித நடேச சாஸ்திரியாரால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு, தகுந்த தமிழ் வித்வான்களால் பார்வையிடப்பட்டு, பிழையறப் பரிசோதித்துப் பிரசுரஞ் செய்யப்பட்டது. தயாராயிருக்கும் காண்டங்கள்.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பாலகாண்டம்... | ... | ரூ. 1 | 12 | 0 | சுந்தரகாண்டம் | ... | ரூ. | 1 | 12 | 0 |
| அயோத்யாகாண்டம் | ... | ,, 3 | 0 | 0 | யுத்தகாண்டம் | ... | ,, | 3 | 8 | 0 |
| ஆரணியகாண்டம் | ... | ,, 1 | 12 | 0 | | | | | | |
| கிஷ்கிந்தாகாண்டம் | ... | ,, 1 | 12 | 0 | 6 காண்டமும் சேர்ந்து வாங்கினால் | | | 12 | 8 | 0 |

மஹாபாரதம்.

## சா ந் தி ப ர் வ ம்.

கும்பகோணம் பிருஹ்மஸ்ரீ பாரதாசாமாசாரியார் எளிய தமிழ் நடையில் மொழிபெயர்த்தது.

சுமார் 1100 பக்கம், விலை ரூ. 3-8-0.

மனுதர்மசாஸ்திரம் 2647 கிரந்த சுலோகங்களும் அவைகளின் தமிழ் மொழி பெயர்ப்பும்—560 பக்கம், ரூபா. 2 4 0.

## கா த ம் ப ரீ.

வெகு பிரசித்தமான ஸம்ஸ்கிருத காதம்பரியின் தமிழ்மொழிபெயர்ப்பு.

பண்டித எம். துரைசாமி ஐயங்கார் இயற்றியது.

பிரஸித்திபெற்ற ஸ்ரீ பட்டபாணன் என்னும் மகாகவி 1400 வருஷங்களுக்கு முன் ஸம்ஸ்கிருதத்தில் இயற்றிய இக்காவியத்தின் பெருமைகள் குறைபடாவண்ணம் தமிழ் நடையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றது.

அபிப்பிராயங்கள்.

சுதேசமித்திரன் —"இம்மொழி பெயர்ப்பு சுயமாயெழுதிய நூலைப்போலவே அமைந்திருக்கின்றது. வாக்கியங்களின் நடை இனிதாகவும், எளியதாகவும் ஏற்பட்டு, ஸம்ஸ்கிருத "காதம்பரி"யின் சுவையை ஒத்திருக்கின்றது. இக்காலத்தில் நாவல்கள் அநேகம் வெளிவருகின்றனவாகிலும், நமது தேசத்தில் பல்லாயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்த கவிச்சிரேஷ்டர்கள் வடமொழியில் இயற்றியிருக்கும் இத்தகைய நாவல்கள் அபூர்வமானவையானதால், இவை நமது தேச பாஷையில் வெளிவருவது அவசியம். பண்டைக்காலத்திலிருந்த பண்டிதர்கள் ஸம்ஸ்கிருதத்தில் எழுதிய வசனகாவியங்கள் வெகு குறைவு. அவைகளுள் 'காதம்பரீ' வெகு சிறந்ததென்று எவர்தான் அறியார்? ஸம்ஸ்கிருதத்திலிருந்து 'காதம்பரீ' யைத் தமிழில் மொழி பெயர்த்தது இதுவே முதல் தடவை."

இந்து நேசன்:—இப்பொழுது எமதிடம் கிடைத்திருக்கும் இக்காதம்பரியானது சகலவிதத்திலும் ஸம்ஸ்கிருத காதம்பரிக்கு மிகவும் பொருந்தியதென்பதில் ஐயமில்லை. ஸம்ஸ்கிருத "காதம்பரீ"யைப் படிப்பவர் தமது மனதில் எவ்விதரஸத்தை அநுபவிப்பாரோ அதே ரஸத்தை இத்தமிழ் மொழி பெயர்ப்பான "காதம்பரீ"யைப் படிப்பவரும் அநுபவிப்பாரென்று நிச்சயமாய்க் கூறுவோம். ஸம்ஸ்கிருத காதம்பரியின் விஷயங்களையும், சுவையையும் அழகிய கதையின் வரலாற்றையும் அறிய விரும்பும் தமிழருக்கும், ஸம்ஸ்கிருதம் கற்கும் மாணுக்கருக்கும் உபயோகமுள்ளது.

2-பாகம் (தனியே) விலை ரூபா 0 12 0.

முழுப்புஸ்தகம் 1-12-0. காலிகோ பயிண்டு 2 0 0.

### வி. கல்யாணராம ஐயர் அண் கோ.

புக்ஸேல்லேர்ஸ், எஸ்ப்ளனேட், மதராஸ்.